சிவமயம்.

பொதியமலையிலெழுந்தருளிய

# அக்ஸ்திய மகாமுனிவர்

உமையவளுக்கு உபதேசித்த

# ஞா ன ச ர நூ ல்

## மூலமும்-உரையும்.



P. S. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்.

ஹநுமான் உபாசி.





ஜெர்மெனி அமெரிக்கா ஆங்கிலநாட்டார் அநுபவமுள்ள நூல்!

ரகசியநூல் வசியநூல் ஆத்மசக்தியுடைய அற்புதநூல்!

அபார விஷயங்களடங்கிய கற்பகநூல்!

விசித்திர செய்கைகள் அறியும் சித்திரநூல்!

# ஹிப்னாடிஸம் மெஸ்மரிஸமெனும்

வாய்வுவேக

# மனோவசிய சாஸ்திரம்.

| | |
|---|---|
| மனதை அடக்குவது | நமது இஷ்டம்போல் நடத்துவது |
| யோகசித்தி அடைவது | ஞானமார்க்கம் சொல்வது |
| வெளிநாட்டில் நடப்பதை | இந்நாட்டில் தெரிந்துக்கொள்வது |

இதை வாசித்து வந்தால், இறந்தகாலம், நிகழ்காலங்களில் நடக்கும் ஒவ்வொரு விஷயமும் அறிந்துகொள்ளவும், நமது முன்னோர்களுடன் பேசவும், பிறர் கண்களுக்கு தோற்றப்படாமல் மறைந்துகொள்ளவும், நித்திரை வருவித்தல், நோய்களை நீக்கும் வகை, ஞானதிருஷ்டி நோக்கம், ஜீவமின்சாரவிளக்கம், விரலைக்காட்டி தூங்கவைத்தல், தூக்கத்தில் நடக்கும் விநோதக்காக்ஷி, இப்னாடிஸ வைத்தியம், கீல்வாய்வு சிகிச்சை, அபினிபழக்கத்தை நிறுத்தல், காந்தவைத்தியம், பிராணாயாம அப்பியாஸம் நீட்டியகையை முடக்காமல்படி முடக்கியகையை நீட்டாமல்படி, மிருகாதி வசியம் அனேகரை ஒரே முறையில் தூங்கவைப்பது, தூக்கத்தினின்று எழுப்பும் வகைகள், நீர்குழிபாய்தல், பாட்டுக்கச்சேரி, தூரத்திலிருப்பவர்களை வரவழைப்பது உயிர்பிராணிகளை வசியம் செய்தல், ஆஞ்சநேயர் மூலமந்திரமும், உபாசனையும் தரிசனமும், ஆத்மயோக மனோவசியம், ஏகாந்தநிலை கர்மாதி துர்குணங்களை போக்கல் பொதுஜன வசியமுறை, மாவிடவசியம், யோகிகளின் திடசித்திமுறை வசிய திருஷ்டி பலவகைகள், ஜெயம் பெறுவதற்கான முக்கிய காமங்கள், வசியத்திற்கு இணங்காதிருக்கும் முறை, இன்னும் இதைப்போன்ற அனேக அதியற்புத விஷயங்கள் சேர்ந்துளதும், பாமரர் முதல் படித்த மேதாவிகள் வரையில் வாசித்துதெரிந்துகொள்ள சுலபமான எளிய செந்தமிழ் நடையில் மணிமந்திரவுத வைத்தியசாலை தலைவரும் பூலோக வர்த்தமானி எடிடரும், அனேக நூல்களுக்கு கிரந்த கர்த்தரும், சுகோதயசிந்து கவித சாஸ்திரரும், இயந்திரகடித பரிசோதகரும், சென்னைவாசியும் மெஸ்மரிஸ இப்னாடிஸ பராக்கிரம சாலியும், சதாவதானம் செழுமனவை சித்திரக்கவி தேவேந்திரராஜ பண்டிதரவர்களால் இயற்றப்பட்டதும் சுமார் 120-பர்கவிஷயங்களடங்கியதும், யாவத்திராணிடத்தில் இருக்க வேண்டியதுமான அழகிய விசித்திர விநோத படங்களுடன்.

1-க்கு விலை ரூபா 1 8 0

பார்சி பிரகலாதன் சரித்திரம் பக்திரசம் ததும்பியது விலை அணா 4.

பார்சி குலேபகாவலி சரித்திரம் இரண்டு பாகமும் 0-6-0.

சிருதொண்டன் சரித்திரம் விலை அணா 0-6-0.

---

ஷண்முகானந்த புத்தகசாலை,
32, நபினியப்ப நாய்க்கன் தெரு, பார்க்டவுன் மதராஸ்.

உ

சிவமயம்.

பொதியமலையிலெழுந்தருளிய

அகஸ்திய மகாமுனிவர்

உமையுவளுக்கு உபதேசித்த

# ஞான சார நூல்

மூலமும் - உரையும்,

பீர்முகமது

திருமெய்ஞ்ஞான சர நூல்

உயர்ஞான சர நூல்

இம்மூன்றும் அடங்கியிருக்கின்றன.



கேளம்பாக்கம்

அ. மதுரை முதலியாரவர்களால்

சென்னை ஜார்ஜ்

பெரியநாயகியம்மன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை] 1925. [அணா 4.



உ

குருவே துணை.

# சர நூல்.

இஃது

உமையவளுக்குச் சங்கரனார் திருவுளமகிழ்ந்து அருளிச்செய்தது.

## காப்பு.

### நேரிசை வெண்பா.

வாழ்த்துவாமுள்ளம் வருவிப்பாநெஞ்சமின்பின்
சூழ்த்துவாமேன்மேற் றுதிசெய்வார் — தாழ்த்த
பாநூலைமுற்றுமறப் பாலித்தருள்கூட்டுஞ்
சரநூலையோதமுன் னேன்றாள்.

### நாமகள் துதி.

உமைமாதுக்கீச னுரைத்தசரநூலில்
அமையாய்ப் பொருளும்மையு — மெய்யாளும்
புவிமடந்தைபூமடந்தை போதமெஞ்ஞானக்
கவிமடந்தையிக் கலைக்கோர்காப்பு.

### அவையடக்கம் வெண்பா.

செய்யமனந் துணிந்த சீர்முன்னோர்சொற்சரநூ
லையமறவோத வருள்புரியைக்கையரென்றன்
முன்னிற்பாரென்று மொழிந்தேன்போற்கற்றுணர்ந்தோர்
மன்னிப்பா ரென்றுமனு.

### இந்நூற்பயன்.

### ஆசிரிய விருத்தம்.

சந்திரபானிலக்கணமும் கோளுநாளுந்
தயங்கியபக்கங்கரணமி யோகம்வாரம்
வந்துசொல்லுஞ்சோதிடத்தை யறியாதார்கண்
மனதினைவாயறியும்வகை யுளாதோவென்ன



விந்தவுடலுயிர்நிலையை யறியாதாருக்
கியாமறியவியம்பும்வகை யாதோவென்னிற்
பைந்தொடியேயாஞ்சொல்லுஞ் * சரநூற்றன்னைப்
பரிந்துபேசுரென்று பரமன்சொல்வான்.

(இ-ள்.) சந்திரன் சூரியன் கோள் நாள் பக்ஷம் கரணம்யோகம் வாரம் இவைமுதலாகச் சொல்லப்பட்ட சோதிடவிலக்கணத்தை யறியாதவர்கள் தத்தமனதினைவினாலே யறிந்துகொள்ளு மார்க்கம் உள்ளதோ உண்டாயின தருளிச்செய்ய வேண்டுமென்றுஉமையவள் கேட்க சங்கரனார் (சொல்லுகிறார்) அழகிய வளையல்கள்பூண்ட கைகளையுடையபெண்ணே யாஞ்சொல்லுஞ்சரநூலாகிய இந்தசாஸ்திரத்தைப் பரிவுடன் பார்ப்பாயாக (பார்க்கில் நன்றுணர்வையென்று) சொல்லுகிறார் எ-று. (1)

சொல்லாருநெடுங்கயிற்றின் வருணமான சூஸ்திரனார் துவக்கெனுமாசிர்மந்தன்னி, நல்லாருமூக்கணை கயிறுகொத்து நலந்தின் காய்மருகின்ற நஞ்சுட்கொண்டு, பொல்லாதகாலப்பாம் புண்டிமிழ்ந்து பூதலத்தில்பிறந்திறந்து போவாரேனு, மெல்லாரும் சரநூற்றன்னை யிகழாதார சாங்கரிகழ்வோர்தாமே.

(இ-ள்.) சொல்லப்பட்ட நாற்புரிகூடிய நீண்ட கயிற்றைப்போல் பரம்பரையாய் விர்த்தியாகிவாநின்ற பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திராதி வருணாசிரமம்பெற்ற இந்தமானிடதேகத்தில் இச்சரம் நாசிகையின் வழியாய்நின்று எருதுக்கு ஒரு மூக்கணுங்கயிறிருந்து ஆட்டுவிப்பதுபோல் நன்மைதின்மையென்னு நஞ்சினையூட்டுவிக்கும் அப்படிபட்ட நஞ்சினையூட்டிக்கொண்டு கொடியகாலனென்னும் பாம்பானது உண்ணவுமுமிழவுந்தான் உட்பட்டு இருவினைக்கிசைந்தவராய் பிறந்துமிறந்துபோவார்கள். ஆயினும் நான்சொல்லிவருஞ் சரநூலை இகழாமல் குருமுகாந்திரத்திலறிந்து அனுபவித்து அந்நெறியினிற்பவர்கள் யாவரேனும் ஒருங்கே தேவராவார்கள் அப்படி யறியமாட்டாதவர்கள் ஊமைகளுக்குச் சரியாவார்கள் எ-று. (2)

### சரம்பார்க்க ஆசனவிதி கூறுகின்றார்.

மூங்கிற்பாய்மிடிகல்லு கோய்மண்டுக்குமுறிபலகைநன்மையில்லை முடிந்துபுல்லு, நீங்கிவிடுங்கீர்த்திதழை மனநடுக்கநகரில் கலைத்தோல்

* சரம் என்பது காற்று மனம் சிவன் சுவாசம் மூச்சு பிராணன் ஆவி உயிர் உயிர்ப்பு இவைமுதலாகச் சொல்லப்பட்டவைதான் என்றறிக.

ஞான் நிறைபுலித்தோ, லொங்கியசெல்வம் வீடுமுன் குசைப்புல்லொளிர் தூசு நன்மையுயர் படர்ந்தாலென்றாங், தூங்கியதுக்கம்போக்கு நன்மையாகத் துலங்கியவாதனத்திருந்து தோகைசொல்வாம்.

(இ-ள்.) மூங்கிற்றடுக்கு ஆதனம்வறுமை கல்லியாதி மண் ஆதனமில்லாமல் வெறுமணையில் உட்கார்ந்துக் கொண்டால் துக்கம் உடைந்த அல்லது அறுபட்டபலகை மனை நன்மையில்லை கோரை பாயல்கள் முதலிய புற்பாயல்கள் சித்திநாசம் பச்சிலை தழைமன் நடுக்கம்மான்றோல் ஞானம் புலித்தோல் செல்வம் தர்ப்பாசனம் மோக்ஷம் வெள்ளைவஸ்திரம் தீமையில்லை சித்ராசனம் அல்லது இரத்தனக்கம்பளம் நன்மை இவைகளில் நன்மையாக விளங்கும்படியான ஆதனத்திலிருந்து சரம்பார்க்கவேண்டும் மற்றுஞ்சொல்லுகிறேன் கேள்மயில்போலு மழகியபெண்ணே எ-று. (3)

சரம்பார்க்க மார்க்கம் கூறுகின்றார்.

சொல்லியவாதனங்கள் பலவவற்றுளொன்றிற் றுய்யபங்கயாதனமாயிருந்துதோன்றும், மல்லலறுத்தேகமனமாக்கி யொட்டியாணபந்த பிராணாயமங்கள்பண்ணி, யெல்லையிலுர்த்தியின் கீழாமெழுத்தைப் பத்தீராயிரநாடிய லீரைந்து, நல்லனவா யதின்மூன்று நாடியோடு நலந்தரும்பே ரவ்வழுத்தை நவ்விபாரே.

(இ-ள்.) முன் கூறப்பட்டவாதனங்கள் பலவுண்டு அவைகளில் தீங்கில்லாத வோராதனத்திற் பதுமாதன மென்னப்பட்ட அங்கமாயிருந்து பார்க்கும்போது மனதுக்குமிக்கவும்சிந்தையினால் அல்லல்வரும் அப்படிவரும் அல்லல்களைநீக்கி வேறுசிந்தையில்லாமல் ஓரேமனமாக்கி ஒட்டியாண பந்தமென்றுசொல்லும் பிராணாயாமஞ்செய்து அதன் மேல்பார்க்கில் எல்லையில்லாத திருவருளுக்கிடமாகிய உத்தியின்கீழிருக்கு மெழுத்தைத்தொடங்கி எழுபத்தீராயிரம் நாடிகள் இந்தத்தேகத்தி லுண்டானவைதெரியும். அந்நாடிகளுள் பத்துநாடிகள் நல்லனவாம் அப்பதிநாடிகளுள்ளும் மூன்றுநாடி நல்லன. அம்மூன்றின் வழியாய்த்தான் சரம் எளிதிற்காணவோடும் இவையறியப் பெரிதாகிய நன்கினையளிக்கு மவ்வெழுத்தைப்பார் மான்போலுங் கண்களையுடைய பெண்ணே எ-று. (அன்றியும் இதன் விவரத்துக்கு மற்றும் வருவனவற்றுள் 35 - வது கவிதைப்பார்க்க.) (4)



நவ்விவிழியா இதயகமலந் தன்னினன்றாக வசவையுயிர் நடக்கும்போதுஞ், செவ்வியுடன்மீளும்போ திருபத்தோராயிரத் தறுநூறைச் செபிக்கிலொருநாளாகு, மவ்வியமூலாதாரஞ் சுவாதிட்டான மணிபூரம்நாகதம் விசுத்தியாக்கினை, பவ்வமற யாஞ்சொல்லுஞ் சாரநூறன்னைப் பார்ப்பவரே பராபரத்தின் பயன்பார்ப்பாரே.

(இ-ள்.) மான்போலும் விழிகளையுடைய பெண்ணே இருதய கமலத்தில் வழியூடுருவிக்கொண்டு யாதொரு தீங்குமில்லாமல் அசவையுயிரென்னப்பட்ட இந்தச்சரம் நாசிகையின் வழியாய்ப்போகும் போது 4-அங்குலங்கள்போக மற்றவை செவ்வையாய்த் திரும்பி வரும்போதும் கணித்துப்பார்க்கில் இருபத்தோராயிரத் தறுநூறு தரம் நடக்கும். அது 60-நாழிகைசேர்ந்த ஒருநாளாகும் அப்பரிசெல்லாம் மூலாதாரம், சுவாட்டானம், மணிபூரகம், அறுகதம், விசுத்தி, ஆக்கினையென்று சொல்லப்பட்ட பாதிலியின் பரிசுதான் அங்கிருந்து உண்டாயினவெனுங்கருத்து. இதனைக்காணும் வழியாதெனில் யான் சொல்லுஞ்சாரநூலை மயக்கமறப் பார்ப்பதுதான். அப்படிப்பார்ப்பவர், பரமாவும், அபரமாகவும் விளங்குகின்ற ஒருவஸ்துவினாலுண்டாகும் பிரயோசனத்தையறிந்துகொள்வார் எ-று.

சந்திரசூரியர் சுழிமுனை இலக்கணமுமற்றும்
யாத்திரை பலன் கூறுகிறார்.

பார்க்கிலிடை இடமதுவே திங்களாலும் பகலவனும் பிங்கலையே வலமதாகும், மேற்கவுரை சுழிமுனைதா னவேவாமக்கி யிடையானசந்திரனே யமுதமாகும், தீர்க்கமுடன் பொருள்விளக்குங் கரியவண்ணந் திராசியாமவனே செப்புங்காலை, வேற்றடங்கண் மடமாதே விரும்பிக்கேளாய் விரிவாக விவையனைத்தும் விளங்கசொல்வாம்.

(இ-ள்.) ஆராய்ந்து பார்க்கில் இடைகலையென்பதுவே இடது பக்கம். நாசியில்வருஞ் சுவாசம் அதுவே சந்திரகலை யென்னப் படும் பிங்கலையென்பதுவே வலதுபக்கம் நாசியில்வருஞ் சுவாசம் சூரியகலை யென்னப்படும் யாவருக்கும் ஒக்கசொல்லுங் காலத்தில் சுழிமுனையென்பது நடுவாகும் அக்கினியென்னப்படும் பின்னும் அந்தச்சந்திரனைச் சொல்லுமிடத்தில் அமுதம் தீர்க்கமாக எப்பொ

ருள்களையும் உண்டாக்குவன் நிறங்கறுத்தவன் ராசியில்திராசி; வேல்போலுங் கண்ணினையுடைய பெண்ணே மற்றுமுண்டாகியவனைத்தும் பரிஷ்காரமாகச் சொல்லுவதனை நீ விருப்பமுற்றுக்கேட்பாயாக எ-று. அன்றியும் அச்சுழிமுனை இரண்டு நாசிகையிலும் பாவியோடும் அதற்குப் பூரணமென்றும்பெயர் (6)

### இதுவுமது.

சொல்லுங்காற் கதிரவனுஞ் சகவியாபி யுத்தநிறம் வெண்மைசா ராசியாகும், கொல்லுமெலாக்கருமங்கள் கொடியவன்னி கூறுங் காணிறஞ்சிவப்பா முபயராசி, நல்லவிடை தெரிந்துணர்சிற் திங்கள் பெண்ணு நலம்பயில்பிங்கலைகதிரோன் புருஷனாகுஞ், செல்லுமிருபதன்காத வழிக்கப்பாலாந் திசைக்கிடமாய்ச் செலவலனூர்சோக்கேளே.

(இ-ள்) சூரியனுடைய குணகுறிகளைச் சொல்லுமிடத்தில், அமதச் சூரியன் உலகத்தில் வியாபகமுற்றவன் பரிசுத்தமான வெண்மை நிறத்தையுடையவன் ராசியில் சாராசி சுழிமுனையென்னும் அக்கினியைச் சொல்லவென்றால் சகலகருமங்களையு மழிக்கும்பொல்லாது நிறம் அக்கினிச் சிவப்புராசியில் மேற்சொல்லிய விரண்டுராசியுங் கூடியது இன்னமும் நன்றாய்த் தெரிந்துபார்க்கில் இடைகலையென்று சொல்லப்பட்ட சந்திரன் பெண்பால் பிங்கலையென்று சொல்லப்பட்ட அந்தச் சூரியன் ஆண்பால் சுழிமுனை யென்னப்பட்ட அந்த உபயராசியானது அன்றினைப்பால் அல்லது அலியாகும் அன்றியும் இருபதிகாதவழிக்கு மேற்பட்ட துலைவான தேசத்துக்குப் போகும்போது சந்திரகலை யோடும்போது புறப்பட்டுச்சூரியகலை யோடும்போது அத்தேசத்தில் போய்ச்சேரவேண்டியதுஇன்னமுஞ் சொல்லுகிறேன்கேள்-எ-று. (7)

### சந்திரன் லக்கணம் அதிலும் அச்சந்திரன் நடக்கும்போது இன்னவை செய்யலா மென்று கூறுகிறார்.

கேட்கிவிடந் தூதாடை யணிபொன்பூணற் கிளர்க்குமனை மடிமைகொளற் கிழ்நீர்காணடல், வாழ்க்கைமனை யெடுத்தல்குடி புகுதல்விற்றன் மன்னவரைக் காணலுண்மை மருவல்சாந்தி, வேட்





ணைதெய்வப்பதிட்டைசாம் வெறுப்புத்தீர்த்தல் வித்தைபெறற்றனைப்புலவத்தன் மிகவுமீத, ஞட்கமல மலர்முகத்தாய் நாசக்கிர்த்தனன்றேயா யிவையெல்லா நயந்துபாரே.

(இ-ள்) சந்திரகலை இடதுநாசிகையில் நடக்கும்போது எந்தெந்தக் காரியங்கள் செய்யலாமென்று வினவிக்கேட்கில் அந்த இடகலையில் ஒருவரைத் தூதனுப்புதல், தூதுதானேபோகுதல், புதியவஸ்திரந்தரித்தல் ஆபரணாதிகள் பூண்டுகொள்ளல் விவாகஞ்செய்துகொள்ளுதல் தாலிகட்டல் ஒருவனை அடிமையாகப் பெற்றுக்கொள்ளல் கிணறுமுதலாகிய குளம் வரிவெட்டுதல் வாழும்படியான வீடுமனை வாழ்குதல் ஒருவீட்டிற்குக் குடிபோகுதல் ஒருவஸ்துவை விற்குதல் நூதனமாய் அரசரைக்காணல் தனக்கு ஒருபடிமேற்பட்டவரானாலுஞ், சரிதான் உண்மையாகிய வஸ்துவைச் சார்தல் சாந்திகழித்தல் இஷ்டதெய்வப் பிரதிஷ்டை செய்தல் சாந்திர்த்தல் ஒருவனைசமாதானஞ் செய்தல் கல்விகேட்டுக் கொள்ளுதல் தனந் தானியமுதலிய ஆஸ்தி சேர்த்துவைத்தல் தியாகங்கொடுத்தல் பாவவிமோசனஞ் செய்தல் இவையெல்லாம் நன்மையாகும் மற்றகாரியங்கள் மத்திபமென்றறிக அன்றுமலர்ந்த தாமரைப் பூப்போலும் முகத்தினையுடைய பெண்ணே-எ-று. (7)

இன்னமும் இதின் செயலறியவென்றால் 46-வது கவியையும் 47-வது கவியையும் பார்க்கவும்.

### சூரியனிலக்கணம் அதிலும் சூரியனடக்கும்போது இன்னவை செய்யலாமென்று கூறுகின்றார்.

பார்க்கில் வலத்துபதேசம் வித்தைசேவை படையோட்டல் பயிர்செட்டுக் களவு சூது, போர்க்கவொண்ணு வழக்குரைத்தல் சரிபரி தேறூர்தல் இறங்குமெழுந்திடுதல் சங்கீதம்பாடல், வார்த்தைபகை பங்கங்கோள் பசாசுதீர்த்தன் மந்திரஞ்சாதித்தமருந் துணலுறங்கற், கோத்தபுனலாடல்கொல் விடங்கடித்தல் கொடும்பிணித்தம்பனயோகங் குறிக்குங்காலே.

(இ-ள்) வலதுநாசிகையில் சரமோடும்போது எவைசெய்யத்தக்கவையென்று விசாரித்துப் பார்க்கும்போது குருஉபதேசம்பெறல் தாம் ஒருவருக்குபதேசம்பண்ணல் வித்தை பாராயணஞ்செய்தல்வித்தைபொருவருக்கோதல் ஒருவனை வணங்கல் எதிரியினுடைய

படைத்துவரத்தால் பயிர்விளைத்தல் வியாபாரஞ்செய்தல் திருடல் சூதகமாடுதல் ஒருவனுனுந் தீர்த்தற்கரிதாகிய வழக்குப்பேசல் யானை குதிரைத் தேர் இவைகளிலேறி சவாரிபோதல் விளங்கிவரும்படியான எழுத்தெழுதல், சங்கீதம் பாடல், பேசத் தொடங்கல், பகைமையுண்டாக்கல், ஒருவனைபங்கப்பண்ணல், கோள்சொல்லுதல், பசாசுஓட்டுதல் மந்திரநிஷ்டை சாதிக்குதல், மருந்துசாப்பிடுதல், போசனம்புசித்தல், நித்திரைசெய்தல், ஸ்நானஞ்செய்தல், கொல்லுதற் கேதுவாகிய விஷயங்களை நிவர்த்திசெய்தல், கொடிய வியாதியைதீர்த்தல், தம்பனயோக்சாதனஞ் செய்தல், இவைகளை யெல்லாங் குறித்தனுபவித்துப் பார்க்கில் நன்மையாகும்- எ - று. மற்றுஞ் சூரியசந்திரருக்கும் விபரம் 46-ங் கவியையும் 48 - கவியையும் பார்க்க. (9)

### சுழிமுனை பூரணசூனிய பலன் கூறுகின்றார்.

காலிரண்டுமொத்தக்காற் சமாதிநன்றுப் கருதியதொன்று காது காணுமெனிற்காறு, சிலமிகுந் தவமுடையாய் நன்மையில்லை தீயனவாங்கருமஞ் சேரக்கூடுஞ், சாலநிறை பூரணத்தில் வழக்குவாது தர்க்கம்போராங்கமன்னர் நம்மைக்கண்டல், மூலமதுஞ்சூனியத்தி னிருத்தில்வெல்வர் முயல்வதெல்லாங் கயல்விழியாய் முயலலாமே.

(இ-ள்) சுழிமுனையா யிரண்டு சாமூர்த்தித் தொடுகையில் என்னசெய்யலாமென்றால் சமாதியோகஞ் செய்தல், கருவிகரணங்களையச் சும்மாவிருக்குதல், தன்மை நினைத்தகாரியம் ஒன்றேனுமாகாது அப்போது ஒருவன்வந்து இப்பொரு ளகப்படுமென்றால் அது அகப்படாது சிலம்பொருந்திய தவமுடைய பெண்ணே இந்தச்சுழிமுனை நடக்கும்போது நன்மையேகிடையாது, கெட்டகாரியங்களெல்லாம் பலிக்கும், இது இங்ஙனம் நிற்க, சாமூச்சில் எந்தப்புழையில் ஓடுகின்றதோ அந்தப்பக்கம் பூரணமென்றும், சரம் ஓடாதபக்கம் சூனியமென்றும்பேர் இப்படியான குறைவிலாத பூரணபக்கத்தில் நின்று வழக்குப்பேசுகிறவர்களை, தர்க்கம்பண்ணுகிறவர்களை, சண்டைபண்ணுகிறவர்களை, ஒருவன் பொய்க்காறுமாசனை, அல்லது தமக்குமேற்பட்டவரை, இவ்வாறு கூறப்பட்டவர்களை இதனால் காணலாமென்று ஒரு காட்சியும் இல்லாதபடி





சரமோடாத பக்கமாகிய சூனியபக்கத்தில் நிறுத்தினால் பூரணபக்கத்தி லிருக்கிறவன் வெல்வான் அல்லாமலும் ஒருவன் இப்படிப்பட்டவர்களை தனக்குச் சரமோடாத சூனியபக்கத்தில் நிறுத்தினால் அவன் பேச்சேமேலாய் வெல்வன் எவ்வெவற்றை எவ்வெவ்வாறு காட்டமுற்றறிய வேண்டுமோ அவ்வவ்வாறே யறியலாம். சேல்மீன்போலுங் கண்களையுடைய பெண்ணே-எ-று. 10

### பிரயாணம் போகும்போது சரம் இசைவுபிசகாயிருந்தால் அதற்கு உபசாந்தங் கூறுகின்றார்.

முயலுங்காற் பூரணத்திலிடத்திலிரண்டடிபோமுன் வலமென்மூன்றடிபோ மொழியும்யாத்திரைக்கு, கயலடருங் கண்மடவாய் கருமமதுமுற்றுங் கருது வடக்குங் கிழக்குமிடத் தேபோகி, லியலுமொருபகையுண்டா மீளமாட்டாரிசைந்தவலந் தெற்குமேற்கேகவென்றிற், புயலடரும் புனல்புகுந்த மானமாவர் புணர்மூலைக்கச் சிறுமிடையாய் போற்றிக்காணே.

(இ-ள்) பின் 19-ங் கவியில் சொல்லியபடி மேற்றிசையும் தென்றிசையும் சந்திரன்றிசை வடக்கு கிழக்கும் சூரியன்றிசை இது இங்ஙனம் நிற்க சொல்லப்பட்டயாத்திரைபோக நாடியவன் சந்திரனில் சந்திரன் திசையே போகவேண்டியது. சூரியனில் சூரியன் திசையே போகவேண்டியது அல்லாமலும் முன் ஏழாங்கவியிற் சொல்லியபடி இருபதின்காத வழிக்கப்புறமான ஸ்தலங்களுக்கும் சந்திரனில் புறப்பட்டுச் சூரியனில் ஊர்போய்ச் சேரவேண்டியது அப்படியே சேரத் தருணபேதமாய்ச் சரமுமிசைவு பிசகாய் மாறியோடினால் அதற்கு உபசாந்தம் யாதெனில் சூரியகலையிற் போகவேண்டிய திக்கின் யாத்திரைக்குச் சந்திரகலையா யிருந்தால் அந்தச்சந்திரன் சுவாசத்தை ஏற வுள்ளேயிழுத்துப் பூரணமாக்கி இந்தக்காலையே இரண்டுதரம் முன்னிட்டுவைத்து பின்புசுதாவாய் நடந்துவழியில் கொஞ்சதூரம் நிற்காமல் போகவேண்டியது. இது சாந்தி சந்திரன்பலன் கெட்டுப்போகும் திசையில்லை சந்திரகலையிற் போகவேண்டியதிசையின் யாத்திரைக்குச் சூரியகலையாயிருந்தால் சூரியன்சுவாசத்தை ஏறவுள்ளே யிழுத்து அக்காலையே மூன்றடி முன்னிடவைத்துப் பின்பு சுதாவாய் நடந்துவழியில் கொஞ்சதூரம் நிற்காமல் போகவேண்டியது இது அதற்குச்சாந்தி சூரியன்

பலன்கெட்டுப்போகும் தீமையில்லை சேல்போலுங் கண்களையுடைய பெண்ணே போகிறகாரியம் செயமாகும் இப்படியல்லாமல் வடக்கு கிழக்குத் திசையும் யாத்திரை சந்திரனடக்கும்போது போனால் போகிறவிடத்தில் ஒருவனுக்கொருவன் விரோதப்பட்டுபோவான் திரும்பமாட்டான் மேற்குத்திசையுந் தெற்குத்திசையுஞ் சூரியகலை பாயும்போது யாத்திரைபோனால் ஜலத்தினால் அல்லது மழையினால் இறந்துபோவார்கள் சுக்கிலனிறைந்த நெருங்கிய ஸ்தனங்களையும் இப்போது தானத்துப் போவதுபோற்றோற்றுகின்ற இடையினையுமுடைய பெண்ணே விசுவாசித்துப்பார் எ-று. 11

ஒருவனுக்கு நன்மைதீமை சொல்லும் மார்க்கங் கூறுகிறார்.

காணவொருகருமத்தைக் குறித்துவந்தோன் கருதியமுன்
னுமிடமுமேனுமிக்கு, பேறுவலமுங்கீழும் பின்னும் வெய்யோன்
பேசியசொல் லெழுத்திரட்டை சோமனாகு, மானுமெழுத்தொற்
றையேற் கதிரோனாகு மதிக்குமவன் பூரணத்தில் வந்துகேட்கிற்,
பூணவுரைத்தனவெல்லா நன்றேயாகும் பொல்லாது சூனியத்திற்
புகலுவோர்க்கே.

(இ-ள்) நாம் அழைப்புக்காரியம் நன்றோ, தீதோ, கண்டறிவோமென்று வந்தவன் முன் 10-ம் கவியிற்சொல்லியபடி சூரியகலை நடக்கும்போது அவனப்பூரணபக்கமாகவே யிருந்தானாகில் அவன் பொருந்தச்சொன்ன காரியங்களெல்லாம் அவனுக்குச் சித்திக்கும் அப்படியில்லாமல் வலதுபக்கத்தில் நின்றாலும் சாம்பார்க்கிறவன் மேலிருக்க வந்தவன் கீழிருந்து கேட்டாலும் நேர்நேரே பின்னிருந்துகேட்டாலும் அச்சூரியகலைக்குடைய பலிதமேசொல்க சந்திரகலை நடக்கும்போது அவனப்பூரண பக்கமாகவே யிருந்து வினவினானாகில் அவன்சொன்ன காரியங்களெல்லாம் அவனுக்குப் பலிக்கும் அப்படியில்லாமல் இடதுபக்கத்தில் நின்றாலும் நேர்நேரே முன்னே நின்றாலும் மேலிடத்திலிருந்தாலும் அச்சந்திரகலைக்குடைய குணமே சொல்க இதுதவிர சாம்போடாத சூனிய பக்கத்தில் நின்றுகேட்டானாகில் அவன்கேட்டகாரியம் பொல்லாதாகும் பலிக்கமாட்டாதென்க அல்லாமலும் அவன்முதல் வாய்திறந்து சொன்னவார்த்தையின் எழுத்தை யெண்ணிப்பார்த்து ஒற்றைப்படையாகில் சூரியனுடைய குணஞ்சொல்க இரட்டையாகில் சந்திரன்



குணஞ்சொல்க. மேல் கீழ் என்றது மெத்தை வீட்டையும் கிணறு முதலிய பள்ளக்குழிகளைக் குறித்ததென்றறிக இப்படியாக 5-6-வகையிற் சொல்லி யிருக்கிறதே இவையெல்லா மேககாலத்திலொத்திருக்கவேண்டுமென்பதில்லை யாதாவது ஒன்றைப் பார்த்துச்சொல்லலா மென்பது கருத்து மற்றும் வருவனவற்றுக் காண்க இன்னமும் விரித்துச்சொல்லுமளவில் சந்திரனுடைய திசையும் பக்கமும் அதுபூரணமானாலுஞ் சரிதான் கிஞ்சித்து மத்திபம் சூரியனுடைய திசையும் பக்கமும் அது சூனியமானாலுஞ் சரிதான் திரணமாயினு நன்மையுண்டே யல்லது விபரீதமாகாது இதற்குப்பிரமாணம் 6-ம் கவியிலும் 7-கவியிலும் சந்திரனைத் திராசியென்றுஞ் சூரியனைச் சராசியென்றுஞ் செப்பியிருப்பதனையறிக. இக்கவிகளில் உரி, பண்பு அல்லது அடைமொழிகளை சேராவிடாமல் பதவுரையாய்ச் சொல்லி வருவோமென்றால் விரிவுரைக்கு இசைவுபடும் வருவதரிது ஆயினும் மவ்வுரிகளை மாத்திரம் சேர்த்துகொண்டு வருவோமென்றால் ஒருஸ்திரீயானவள் தன் புருஷனுக்கு அயலிலிற் சம்போககாலத்தில் கால் கை படுதல் முதலிய கற்புடைமை தவறுதல் கூடாதென்று அங்குமனைவகளை, இருக்கக்காண்பிக்கப் புகுவான், புகுங்கால் அச்சதிபதிகள் சொண்டகருத்து ஒருமித்துத் தடையின்றி நிறைவேறுமோ, வேறு அதுபோலிக்கும் விகாரமில்லாமல் உரைபுணர்வுற மாட்டாததால் சமைபவுச்சிதமாய் சேர்ப்பித்தவும், நிராகரிக்கவுமாற்று எ-று. 12

இதுவுமது.

அதினும் முன் 10-வது கவியிற்சொல்லிய
பூரணசூனியங்களின் விகற்பங்
கூறுகின்றார்.

கேடெல்லேன் பறிகொடுத்தோ னஞ்சுதின்றோன் கிடையி
னிற் சாவெல்லேன் கிளர்நோய்கொண்டோன், பாடொன்றுமில்லை
சூனியத்தேபோகிற் பலித்துவிடும்பூரணத்திற் பகர்ந்ததெல்லாம்,
ஆடும்பையாவென்ன வல்குலாளே யடுத்தொருவன் வந்ததிசை
சோமனாகில், நீடுஞ்சொல்லிரவிபாகிற்குமாகில் நினைத்தமொழி யாகாது
நின்றதுகேளே.

(இ-ள்) ஒருவன்வந்து காணியனதனால் கெட்டுப் போனேனென்றாலும் காணியதை பறிகொடுத்தேனென்றாலும் விஷந் கடித்தது அல்லது விஷமுண்டேனென்றாலும், இதோபடுக்கையிற்

றுனே பிராணன்போகின்றது என்றாலும் அல்லது இவைமுதலாகச் சொல்லப்பட்ட அபாயகுணகுறிகள் எவையாயினும் சரிதான் சரம் ஓடாத சூனியபக்கமாய்வந்து நின்றானாகில் ஒருவருத்தமுமில்லை நிவர்த்தியாகி போகுமென்க அப்படியல்லாமல் சரம் ஓடுகிற பக்கமாகிய பூரணபக்கத்தில்வந்துநின்றுசொல்லுவானாகில்வந்தவன்எப்படிச் சொன்னானோ அப்படியே பலித்துபோகும் பறிபோனபொருள் வாராது நஞ்சுமீளாது படுக்கைவிடுனோயாளி தேறான் அன்றியும் சூனியத்தில் எவனாவது வந்து எதையாவதுச் சொன்னானாகில், அது ஒருகாலத்தில் அபதமான வார்த்தைகளானாலும் ஆகும், பூரணத்தில் சொன்னசொல் உண்மையாயிருக்கும் இதல்லாமலும் ஆடம்பையரவென்ன, வல்குலுடைய பெண்ணை வந்தவனுடைய திசையும் 12-வது கவியிற் சொல்லியபடி எழுத்தையு மெண்ணிபார்க்கையில், அவன் வந்ததிசை சந்திரன் கூறாகவும் முதற்சொன்னச்சொல் சூரியன் கூறாகவுமிருந்தால் மேற்சொல்லிய காரியங்களுக்குக் கிஞ்சிதமத்திபமாயினு முழுமோசமல்ல, இன்னமுஞ் சொல்லுகிறேன்கேள்-எ-று.

கருப்பக்குறி கூறுகின்றார்.

கேட்டவனுருயிர்தன்னி லேறிநிற்ற கிளர்கையிலு யிருளவை பிடித்துநிற்றல், வாட்டமறவருமதலை யிடத்திற்பெண்ணும் வலமாகி வின்றுவாத்தன் மைந்தனாகும், மீட்டமில் சூனியத்துறைக்கித் கேடேயாகு மிருஞ்சுழினைமேலுரைக்கி லலியேயாகு, நாட்டுமொழிசூனியம் பூரணத்தேயாகி நடுக்கமுடன்மகவுயிர்க்கக் கிடைக்குமன்றே.

(இ-ள்) ஒருவன் கர்பத்தைக்குறித்துக்கேட்குங்காலத்தில்வந்தவன் ஒரு சிவன்பேரி லேறிக்கொண் டிருந்தானானாலும் உயிருள்ளயாதொன்றைக் கையிற் பிடித்துக்கொண்டிருந்தானானாலும் ஒரு சிவனைத் தொட்டுநின்றானானாலும் அவன் நின்றபக்கம் வலமாகில் அதிலும் பூரணமானாற்றான் ஆண்பிள்ளை பிறக்குமென்க, இடமாகிப் பூரணமானாற்றான் பெண்ணென்க, அப்படிப் பூரணபக்கமல்லாமல் சூனியபக்கமாயிருந்து எதனை தொட்டு நின்றாலும் சும்மாவே நின்றாலும் வலமாகில் ஆண்தான், இடமாகில் பெண்தான், ஆனால் பிறக்கிறபிள்ளைசாகும் அப்போது சரம்பார்க்கிறவனுக்கு சுழிமுனையாயிருந்தால் பிள்ளை ஆணுருவினதல்லாமலும் பெண்ணுருவினதல்லாமலும் அலியாகுமென்க இப்படியாகவந்தவன் முன்வலத்தில் நின்று







அவன்வந்த காரியத்தைச் சொல்லிக்கொண்டேபின்னிட்டுநில்வந்து நிற்கில் தாய்வயிற்றி லிருக்கின்ற பிள்ளைவருத்தப்பட்டு பின்பிறக்குமென்க-எ-று. (14)

கெற்பக்குறியும் போர்வெல்லுங்குறியுங் கூறுகின்றார்.

அன்றே அசைக்கிடக் கின்றமைந்தனுந் சூனியத்திற்கேட்டாங் கெடா திருவர்போருவது சூனியத்திலோது, வடிக்கின்றமொழியின் முதற் சொன்னேன்றோர்பன் மருவிபூரணத்தின் பின்புசொன்னோன்றேற்பன், நடக்கின்றசுழிமுனையில்வெட்டலர்கள் போந்தனட்பாகும் வலத்தியங்க நடப்போன்செல்வன், இடத்தியங்கிலஞ்சடிபோயெதிர்த்தோன்வெல்வ னிருஞ்சுழியிதிற்கிவிட ரில்லையாமே.

(இ-ள்) இதற்குமுன் கவியில்சூனியத்திற் கேட்டபிள்ளை மரிக்குமென்றாலும் போர்வழக்கு வாதைக்குறித்து ஒருவன்வந்து இன்னவன் இன்னவன், எவன் வெல்வானென்றால், வந்தவன் சூனியபக்ஷத்திருந்து சொன்னானாகில் முன்சொல்லப்பட்ட பெயரையுடையவன் தோற்பன் அப்பொழுது சரம்பார்க்கிறவனுக்குச் சுழிமுனைநடந்தால் அவ்விருவரு மொருமித்துப்போவார்கள் இதல்லாமலும் சண்டைவாதுவழக்குநேர்கிறவனுக்கு அப்போது சூரியகலையாயிருந்தால் வெல்வன், சந்திரனாயிருப்பவன் தோற்பன், சுழிமுனையாகில் ஒருமித்துப் போவார்கள் அப்படிச்சந்திரகலை நடக்கப்பெற்றவன் முன் 11-வது கவியிற்சொல்லியபடி சரத்தைபுள்ளிமுத்து பூரணமாக்கி அச்சரம் நடக்கிறகாலையே முன்னிட்டு ஐந்தடிபோய்பின்புசேர்ந்தால் வெல்வன். (15)

சந்திரன் ஸபரிசங் கூறுகின்றார்.

பார்க்குங்காலிடமெனினும் வலமெனினுமொக்கும் பஞ்சபூதத்தியக்கம் பகருங்காலை, சாற்றியதன்டேன்சேரிற் பிரதியியாந் தப்பாமலப்பிணிக்குத் தாழ்வோடு, மேற்றிசையைநோக்கிபெழு மங்கிவாயு மெய்புணர்ந்தோர் புறத்தோடு மேன்மைகுன்று, நீத்துரையாநாற்றிசையுஞ் சிதறியோட வெடுவாவென்றுரைத்திடுநீ நிலத்துளோர்க்கே.

(இ-ள்) இடை, பின்கலை, சுழிமுனை என்று சொல்லப்பட்ட இம்மூன்று கலைகளையும் அவற்றின் பயங்க ளனுபவத்தையும் பரிக்ஷித்து பார்க்குங்காலத்தில் ஒத்துவரும் அந்தந்த நாடிகளுக்குள் பஞ்சபூதியங்கள் நடப்பதுண்டு அவற்றைத் தேர்ந்தறிந்து அனு

பலிப்பதே யரியதாகும். டாதெனில், மூக்கிலிருந்துவருகிற சரம் அம்மூக்குத்தண்டைச் சார்ந்துவந்தால் பிரிதிவின் கூறென்றறிக. அத்தண்டிற்கு நேராகிய மற்றொரு புறத்தைச்சார்ந்து வீசினால் வாயுவின் கூறென்றறிக. இப்படி நான்குபக்கங்களுள் ஒருபக்கமல்லாமல் அந்நான்குபக்கமும் கலைநீதிநடந்தால் அது ஆகாயத்தின் கூறென்றறிந்து உலகத்துள்ளவர்களுக்குச் சொல்வாய் எ-று. (16)

இப்பஞ்சபூதியமிடத்திற்கும் வலத்திற்குமொன்றுதான்.

சரத்தின்வடிவமும் நிறமும் அச்சரத்தின் ரசக்கியமும் கூறுகின்றார்.

நிலம்பொன்மயிரத நெடுங்கோணநான்கா நீளம்பன்னிரு விரலா நீர்தான்வெண்மை, இலகுபிறைவடிவுகண் டந்துவர்த்திருக்குமெட் டிரண்டுவிரலோடு மெரிதான்செம்மை, நலங்கொண்ட முக்கோண மழற்சிமேலாய் நாலிரண்டு விரலோடு நவிர்காவிலத், துலங்குபுளி யறுகோண மொருபக்கத்திற் றய்யநால் விரலோடுஞ் சொல்லு காலே.

(இ-ள்.) பஞ்சபூதியசரம் நடப்பதை இன்னமெப்படிக்கண்டு தெரியலாமெனில், பிரிதிவு சரம்பொன்மை அப்புச்சரம் வெண்மை தேயுச்சரம் செம்மை வாயுச்சரம் கருமையாயிருக்கும் அப்போது கண்டத்தில் எவ்வித உணர்ச்சியாகுமெனில், பிரிதிவுக்கு கண்டந் தித்திக்கும், அப்புவிற்கு துவர்க்கும், தேயுவுக்கு உவர்க்கும் அல்லது அழற்சியாயிருக்கும், வாயுவுக்கு புளிக்கும். எவ்வடிவா இருக்குமெனில் பிரிதிவு எண்கோணம் அப்பு எட்டோள் பிறைபோலிருக்கும். தேயு முக்கோணம் வாயு அறுகோணம் அன்றியும் அத்து ஓடுகிற நீட்சியைச்சொல்லுங்கால் பிரிதிவு பன்னிரண்டங்குலம். அப்பு 16-அங்குலம் தேயு 8-அங்குலம் வாயு 4-அங்குலம் என்றறிக. இதல்லாமலும் இக்கவியில் இரதமென்று தனியே போட்டபடியினால் முதல் இரசமாகவே வைத்துக்கொள்ளலாயிற்று உலகத்தவருக்குச் சொல்லுங்காலத்தில் இப்பேதங்களை அவர்களறிவது அரியதென்று ஒரு பூதியத்திற்கு நான்கு குறிசொல்லியிருக்கின்றார். ஒன்றில்லாவிட்டாலும் மற்றொன்றிலாவது தெரியவேண்டியது. (17)





இதுவும் அதுவுடன் அப்பூதிய நடக்கையில் செய்கருமங்களின் குணாகுணம் கூறுகின்றார்.

சொல்மயவான் வடிவதுதான் வட்டமாகுந் துய்யதொருவிரலுசி யெல்லாஞ்சுற்று, மொல்லைநிறம் படிகங்கைப்பிரதம் வாயுமோடிவரும் பூதங்கட்குளதோ சொல்க, மல்லநில நீர்க்குமிருபயனுஞ்செந்தி மத்திபமாம் பவர்காலும் வானுந்திதாம், பல்வளையாய் சரம்பார்ப்போன் றன்னைப்போற்றி பாகிலையுடன் றுதிவிட்டுப்பணிந்துபாரே.

(இ-ள்.) ஆகாயபூதிய நடக்கும்போது நிறம்படிகம் இரசமகண்டங் கசக்கும் வடிவுவட்டம் நீட்சி ஓரங்குலம் இப்படியாக பூதியங்களின் குணகுணங்களைச் சொல்லவெனில் பிரிதிவுக்கும் அப்புக்கும் உத்தமம் தேயுமத்திமம் வாயுவும் ஆகாயமும் நிதாம் வளையல்களைத் தரித்த கரத்தையுடையபெண்ணே சரம்பார்த்துக் குறிசொல்லுகிறவனுக்குத் தாம்பூல முதலானவைகள் கொடுத்து, உபசாரதிகள் செய்து பின்கேள் இங்ஙனம் நிற்க, முன் 7, 8-ங் கவியிற்சொல்லியபடி சூரியசந்திரகலையிற் செய்யவேண்டிய கருமங்களும இக்கவியை அனுசரிக்கவேண்டியது. 48, 49-ங் கவியைப்பார்க்கவேண்டியது. அதிலும் சரம்பார்க்கிறவன் தாம்பூலம் தரித்துக்கொள்கையில் வினவிக்கேட்கிறவனுக்குஞ் சொல்லுகிறவனுக்கும் நன்கு எ-று. (18)

ஒருவன்பேரைக் குறித்து வினவில் அவனுக் குரியவைகளைக் கூறுகின்றார்.

பாராகுமுதுகுநீர் காலநாகும் பைந்தழல்மார் பவனங்கைப் படர்வான்சென்னி, போரமல்வினவினவபோ துதித்தபூதப் பேர்படைத்த விடங்களிலே பிழையில்லாம, லோருகும்பூரணமாம்பக்கந்தன்னிலேறிவிட்டுங் கோல்படுதனிசைத்ததெல்லாங், கூராழிமால்வந்து விலக்கினாலுங் குறையாமல் வடுப்படுங்காண் குறிக்குங்காலே.

(இ-ள்.) முன் 15-ங் கவியிற்சொல்லியபடி இருவரைக்கட்டிக் காட்டாமலும் சூரியபக்கத்திலிராமலும், பூரணபக்கமாக விருந்து சண்டைக்குப் போகிறவன் என்னவாமெனில் ஆயுதங்களினால்

காயம்பட்டு வருவான் என்றுசொல்க அதிலும் அப்போது பிரதி வாடக்தால் முதுகில்படுமென்க அப்புவாகில காலில்தேயு, மார்பு வாயுரை, ஆகாயமாகில் தலையிற்படுமெனச் சொல்க விஷ்ணுதேவன் வந்து விலக்கினாலுந் தப்பித்துக்கொண்டு வரமாட்டானென்க எ-று.

இந்த விந்தப்பூதியத்துக்கு இந்திந்த ஆயுதமெடுத்துப்
பொருகவெனவும் அதற்கிவ்விடத்தி
நிற்கவெனவுங் கூறுகின்றார்.

கால்மூலைதொடங்கி யழன்மூலையேறக் கவிறெனவே நிறிமதி க்கிரோனுக, கோல்மேற்குந் தெற்குமதிநிலமாகக் கொள்க கொழு ங்கதிரோன்கிழக்கு வடக்காககொள்க, சேல்போலு நெடுங்கண்ணா ய்புவிக்குக்கத்தி நேர்ந்தசலம்வாளழற்குந் சிலைகாலுக்கு, மேற்றண் டாம் வானுக்காயுதங்கல்லேந்தி விதித்தநிலத்திற் பொருதல்வெற் றியாமே.

(இ-ள்) மேற்கூறியபடி சமர்செய்யவேண்டில் வாயுமூலைதொ டங்கி யக்கினிமூலையளவாக ஒருகயிறு பிடித்தார்போல் சரியாய் பாவனைசெய்து அதில் மேற்கையுந் தெற்கையுஞ் சந்திரன் கூறாக வும் வடக்கையுங் கிழக்கையுஞ் சூரியன் கூறாகவுங்கொண்டு போர் செய்கிறவனுக்கு அப்போது சூரியகலையியங்கள் தானச்சூரியன் றிசையிற்றானே நின்று எதிரியைச் சந்திரன்றிசையில் நிறுத்திச் சமர் செய்யவேண்டியது, அப்படிச்செய்கையில் சந்திரனானாலுஞ் சரி சூரியனானாலுஞ் சரி யெடுத்தெறியுமாயுதங்கள் எவையெனில் சேல்மீன்போலு நீண்டகண்களையுடைய பெண்ணே பிருதிவாகில் கத்தி, அப்புவாகில், வாள் தேயுவாகில், வில், வாயுவாகில் தண்டு ஆகாயமாகில் கல், இப்படியாக அந்தவந்த பூதியங்களுக்கு அந்த வந்த ஆயுதங்களேந்தி விதிப்படி அந்தந்தநிலத்தினின்று சண்டை செய்தால் வெற்றியடைவன் எ-று. (20)

நோய்க்குறி கூறுகின்றார்.

ஆகியநோய் புருட்ருக்காய் புருடவலங்கேட்கி லாறுமென்க மாதருக்கு மாதறிந்துகேட்கில், சோகமிலிம்மை முறைதப்பிற் பொல்லாதென்க தொலையாது நாட்சென்று மீளுமென்க, தோகை நில நாட்செலுநீர் கடுங்கினுஞ் சுடுதழலான் மூன்றுதப்பிற்றஞ்சப் பண்ணு, மேகநெங்காலிரண்டின் மிருந்தார்கெல்லு மெழில்வான மன்றுதப்பி லிறக்கும்பின்னே.







(இ-ள்) புருடன்கொண்ட பிணிக்காகப் புருடனேவந்து சரம் பார்க்கிறவனைக் கண்டு இந்நோய் லகுவாமாவென வினவினுமந் நோய் தாவிலையாம், சரம்பார்க்கிறவனுக்கு வலதுபக்கத்தில் நின் றுகேட்கினும் நிவர்த்தியாகும் ஐயமில்லை ஸ்திரீகொண்ட நலிக்காக ஸ்திரீயே வந்து வினவினாலுங் குணமாகும், வந்தவள் அவனுக்கு இடதுபக்கத்தில் நின்று கேட்கினும் மீளும் சமுசயமில்லை முன் பதின்மூன்றாங்கவியிற் சொல்லியபடி சூனியபக்கமாகவே யிருந்தா லுத்தமம் இப்படியல்லாமல் ஆணுக்குப் பெண்வந்தாலும் பெண் ணுக்கு ஆண்வந்தாலும் அவ்விபாநிதீர்வ துல்லபம் அன்றியும் ஒருவன் வலதுபக்கத்தினின்று குறிகேட்டுக்கொண்டே இடது பக்கத்தில்வந்து நின்றாலும் ஒருத்தி யிடதுபக்கத்தில் நின்று குறி கேட்டுக்கொண்டே வலதுபக்கத்தில்வந்து நின்றாலும் நோய்போ க்க கடினம் ஆயினும் மெல்லெல நாட்சென்று சொஸ்தப்படும், அப்படியே சரியாய்வந்து கேழ்க்கில் அந்தநோய் நீங்குமென்க அதி லும் எப்போது நிருமெனில் அந்நோய் பூதியம்நிருதிவாகில் கொ ஞ்சநாட்செல்லுமென்க, அப்புவாகில் விரைவிலென்க அக்கினியா கில் மூன்றுநாட்களில் விமோசனமாகுமென்க மிருந்தாற் சொல் லும்! வானமாகில் அன்றைக்கே நோய்பிரிந்து மாளும் மிஞ்சி மறு நாள் மரிக்குமென்க எ-று. (21)

இதிலிதின் முன் கவியிற்சொல்லிய வியல்பும் அதன்மேற் கவி களிற் செப்பிய பூதியங்களின் குணமும் முன 9-வது கவியிற் கூறி யபடி சரம்பார்க்கிறவன் ஓரிடத்துக்குப் போகவேண்டியது இத் தருணமென்றும் பேசவேண்டியது.

இத்தருணமென்றுங் கூறுகின்றார்.

இறக்குமுபயந் தனக்கைந்துநாளிலே கிணக்காற் சாவில்லை இதுதான்மெய்யே, பிறகுமொருபூதலந்தி லைந்துபூதம் பிறந்தோ டுமது குரவன்பேசக்கேட்டுச், சிறப்புடைய பயன்றெறிவ தல்லா நூலின் செயலதனாற் றேவர்களுந் தெரியமாட்டார், நிறக்குமதிக் கருந்தழைத்தால் வந்தது கேட்டா ளிள்வெயிலாச் செலசொல்க நினைத்துகேளே.

(இ-ள்) இதற்கு முன் கவியிற்கூறிய பூதியங்களி னியற்கை யாகிய குணங்களுக் குரியவை சொல்லக்கூடாது அதற்கு முன் 10-ங் கவியிற்சொல்லியபடி சுழிமுனை நடக்கில் ஆகுமென்பது ஆகாது ஆகாதென்பது ஆகும்போல இப்போதும் ஒருவன் நோயு

க்குறித்துக்கேட்கும்போது சுழிமுனை நடந்தால் அந்நோயாளி ஐந்து தினங்களுள் மரிக்கும் அப்படி மரிக்காமல் தப்பினால் அவனுக்கினி யொருவிபத்து வருமளவுஞ்சாவான் இதுமெய்ம்மை யன்றியும் முன் 14-ம் கவியிற் சொல்லியவண்ணம் ஒருபக்கமோடுகிற சரத்தில் ஐந்துவகைப்பட்ட பூதியங்களுண்டு அப்பூதியம் ஒவ்வொன்றுக்குள் ஐந்துபிரிந்து நடப்பனவுமுண்டு அவைகளவையெனில் ஒரு பிருதிவுக்கு பிருதிவிற் பிருதிவு பிருதிவிலப்பு பிருதிவிற்றேயு பிருதிவில்வாயு பிருதிவில் ஆகாயம் இப்படி இவ்வைந்துக்கு மோர்தாயோடும் இதனையும் மற்றிந் நூற்பயன் யாவையும் குருமுகாந்தரத் தினறிந்து கொள்வதல்லால் தேவர்களேயானாலுந் தனியே கருதிக் கொண்டு குருவைத்தள்ளிச் சுயானுபவம் அல்லது சுயானுபவத்தால் இந்நூலைக்கொண்டே அறிவது கூடாது அல்லாமலும் சரம் பார்க்கிறவனை ஒருவன் வந்தழைத்தால் அவன் சூரியகலை யியங்கும்போதே போகவேண்டியது. பேசுகிறதனாலும் குறிசொல்லுகிறதனாலும் சூரியனியங்கும்போதே சொல்லவேண்டியது மற்றப்படி கூடாது மிஞ்சிநடக்கில் மத்திபமென்றறிக இன்னமுஞ் சொல்லுகிறேன் மனதுற்றுக்கேள் எ-று. 22

## பூதியசரங்களியல்பு கூறுகின்றார்.

கேளிதனை நிலத்திற்கு நீரிற்குந்துணமாங் கெற்பமெனிலாணு
குங் கொக்கொருவன் வினவி, ஞானின்மிகுலாபங்கள் சாந்திபோக்கு
நன்றாகுமங்கித னிலங்கப்வெல்லும், வாளமரிற் பொல்லாது கெற்
பங் கேடாம் வாயுவெனிற் பெண்ணாகுமற்போர் தோற்கு. நீள்
விசும்பிற் றனுவித்தை யோகந்தானு நீடுமிக கெற்பமெனி லலி
யாய்வியும்.

(இ-ள்) பெண்ணே கருத்துற்றுக் கேட்பாயாக முன் 16-ம் கவியில் சொல்லிய பூதியசரங்களினியல்பு கூறுமிடத்தில் பிருதிவும் அப்பும் நன்மைகளையே தருவன் இதன் 33-ம் கவியிற் சொல்லியபடி ஐந்து நாழிகைக்கு மிஞ்சி நடக்கையில் இவ்விரண்டு பூதியங்கள் அதிகமாக நடந்தால் லாபமுண்டு வேண்டில் 18-ம் கவியையும் பார்க்க இதின்வனம் நிற்க முன் 14-ம் கவியிற் சொல்லியபடி ஒருபிராணியைக் கைப்பற்றுமலும் அதின்பேரினார்ந்து நில்லாமலுந் தனியேவந்து சூன்னியத்தினில்லாமல் பூரணத்தில் நின்று கெற்பக்குறிகேட்டால அப்போது காம்பிரிதிவாவது அப்புவாவது நடந்தால் ஆண்பிள்ளை பிறக்குமென்க 6-வது கவியிற் சொல்லியபடி சாந்திபண்ணுதல் போக்கு கழித்தல் செய்யவேண்டிய



போது அன்னைந் சொல்லியகலையில் இவ்விரண்டு பூதியங்களிலே தாவது நடக்கும்போது செய்தால் பலிக்கும் இதன்றித் தேயுபூதியம் நடக்கையில் போராங்கம்புரியில் வெல்லும் அப்போரில் வாளெடுத்தால் மத்திபமாம் அப்போது கெற்பத்தைக்கேட்டால் அது அழிந்துபோகும் வாயுநடக்கையிற் கெற்பம் பெண்ணாமென்க. மற்போர் தோர்விரடையும் ஆகாயமாகில் விற்சமர் செயிக்கும் இப்போரிலக்கணஞ்செப்பிய 20-ம் கவியையும் 18-ம் கவியையும் 10-ம் கவியையும் பார்க்கவும் 9-ம் கவியிற்சொல்லிய யோகம்புரிய நன்மை ஆகாயசரம் நடக்கையில் கெற்பங்கேட்டால் அலியாய்ப்பிறக்கும் மிந்தது பிறக்கும் என்க எ-று. (திவார நட்சத்திரக் காலசரபலன் முன் 4-கவியிலும் 35-ம் கவியிலுஞ் சொல்லியபடி பிராதகாலத்திற் சரம்பார்க்கவேண்டிய கிரமத்திலும் விசேஷமாய் பார்க்கவேண்டியதிதுவென்றுங் கூறுகிறார். (23)

வியாதபிரதமை முதல்விளங்கும் பக்கம் விரவிவரு முப்பதினு
மூன்றாக, மாயாது வருஞ்சோம னிடமதாக வருகின்றவருக்
கனுக்கும் வலமதாகச், சாயாது புதன்வெள்ளி திங்கண்மூன்றுந்
தப்பாது சந்திரனுஞ் சாற்றுங்காலே, தேயாது கதிர்செவ்வாய் சனி
வியாழஞ் செங்கதிரோன் றினமென்று தேறுநீயே.

(இ-ள்.) முன் 4-ம் கவியிலும்பின் 35-ம் கவியிலுஞ் சொல்லியபடி பிராதகாலத்தில் சரம்பார்க்கவேண்டிய கிரமத்திலும் விசேடமாய்ப் பார்க்கவேண்டிய தெதுவெனில் பொழுதுவிடிய 5-நாழிகை இருக்கையில் எழுந்துமேல் 4-வது கவியிற்சொல்லியபடி சரம் பார்க்கும்போது வளர்பிறை பிரதமைக்கும் துவிதிகைக்கும் திரிதிகைக்கும் சந்திரகலையுதித்து நடக்கவேண்டியது. இப்படி மூன்றுக்கு பன்னிரண்டும்போக தேய்பிறையில் பிரதமைக்குந் துவிதிகைக்குந் திரிதிகைக்குஞ் சூரியகலையுதித்து நடக்கவேண்டியது. பொழுதுவிடிய 5-நாழிகை இருக்கையிலுதித்த சரம் மற்றவைந்து நாழிகையுங் கலங்கா தோடவேண்டும் திதிபோக வாரங்களிலெவை நிகழவேண்டியவெனில் ஞாயிறுக்குஞ் செவ்வாய்க்குஞ் சனிக்கும் வியாழத்திற்கும் சூரியகலை யுதித்தோட வேண்டியது. திங்களுக்கும் புதனுக்கும் வெள்ளிக்குஞ் சந்திரனுதித்தோட வேண்டியது. இப்படி யுதிக்குஞ்சரம் எந்தப்பூதியத்தி லுதிக்கவேண்டியதெனில், பின் 43-வது கவியைப் பார்க்கவேண்டியது இதில்பூதியங்கள் அதிக

மாய்க் கதித்தோடில் பயன்கள் என்னவையாமெனில் முன் 26-வது கவியிற் றெரியும் அன்றியும் விபரம் 33-வது கவியிற்காண்க.

இதனுள் நட்சத்திரங்களுக்கு நடக்கவேண்டிய கால்சாரமும் இதன்மேற் கவியிற்கூறிய வாரங்களுக்குரியனவாகிய காலசாரங்கள் சரிவரில் இடரில்லை பிழைக்கில் இன்னவின்ன நிகழுமென்றுங் கூறுகின்றார்.

தேறிடு நீயொன்பதுநாள் பூராமதி சிரந்தரோகணிய சதய
உத்திரட்டாதி, கூறிடுஞ்செங்கதிரோர ஞாளாகக்கொள்க கூறுஞா
டையமதிக் கென்றுகொள்க, வீறிடுஞ்செங்கதிர்பிழைக்கி னோய்சாரி
க்கு மிடித்திடுமெண்டலஞ்சேய்க்கு வெம்போச்சாவாய், பாறிடும்
பொன்பிழைக்கின்மன்னர் கேடாம்புத்தி பதிக்கதிபன்கெடுமிந்து
கிளைஞர்போக்கே.

(இ-ள்) பெண்ணோ திதிவார்மென்று இரண்டு வேறுபாடாய்க் கூறினேமென்று தியக்கம் வேண்டியதில்லை விபரம் மேற்கவிகளிற் றுனே சொல்லியிருப்பதைக் காண்க இவ்விரண்டினுடன் கீழ்வரும் நட்சத்திரபலனாகிய மூன்றினுள்ளும் ஏதேது கஷ்டமோ அதிலும் ஏதேது இஷ்டமோ தெரிந்து அதிலும் மிக்கத் தாக்கம்நோக்கிப் பார்ப்பதென்று காண்க கண்டு தேறியிரு-அஃது நட்சத்திரங்களுக்கு நடக்கவேண்டிய காலசாரமாம் எதெனில் பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை, ஸ்வாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம் உரோகணி சதயம், உத்திரட்டாதி, இப்பன்னிரண்டிலுஞ்சூரியனடக்கவேண்டுமெனக் கொள்க மற்ற பதினைந்திலுஞ் சந்திரன் நடக்கவேண்டும் அல்லாமலும் மேற்கவியிற்கூறிய வாரங்களுக்குரியனவாகிய காலசாரங்களில் ஞாயிறுதப்பில் விபாதி சனி வறுமை செவ்வாய், சண்டைசாவு, வியாழம் தன் மன்னனுக்குக் கேடாம், புதன் அவ்வூரதிகாரிக்குக்கேடு, திங்கள் சுற்றத்தாருக்குக் கேடுவரும் தன் மன்னனென்பதும் அவ்வூரென்பதும் சரம் பார்ப்பவனுக்குரியனவாம் வெள்ளியின் கவியிற்காண்க சனி, வறுமையுடன் தன் கையிலிருப்பதும் போகும் பொன்பிழைக்கில் மன்னர்கேடாமென்பதில் தன் தாதாவிற்கு வருத்தம்வரில் தனக்கு எப்படிப்பொருள்வரும் வராது பதிக்கதிபன் கெடுமென்பதில் அவனிவனுல் பரிகொடுக்கப் பட்டானெனவரும்-எ-று. (25)

இதன்மேற்கவியிற் கூறுதவெள்ளிபிழைக்கில் நிகர்வன விளைவெனவும் மாற்றதன்மேற் கூறிய திதிபிழைக்கில் நிகழ்வன விளைவெனவுங் கூறுகின்றார்.



போக்கரிய புகழ்பிழைக்கி லூர்விட்டேகல் பொருந்தியதோர்
மெய்ந்தோதப் புணர்ந்தோர்சாத லாக்கமதி விடாமுற்கக் கந்தன்
னிலருங் கலகமிரண்டாமிரண்டாகி லர்த்தநாச மிளைஞர்க்குறுநோயுண்
டாந்தேக்கியவைந்திற்றேசமலைபு மாறிற்செகத்தரசர் கெடுமேழிற்
சேருநோவே.

(இ-ள்.) வெள்ளிதப்பில் நான்வசிக்கும் பதியைவிட்டு ஒழிந்து போதலாகவேணும் அவ்வெல்லையைவிட்டு மற்றோ ரெல்லையைப் போய் மிதிப்பதாகவேணும் வரவரும் தேகநலிவரும் தன்மனைவிக்குச் சாவுவரும் சாவென்பதில் சண்டை பிணக்கு நோய்முதலிய வருத்தமாதலையும் சதிபதிகளுக்குப் பொருத்தம் போதலையுங் காண்க நூலாசிரியர் புணர்ந்தோர் சாதலென்றும் சாமுவுவரைக்கும் வருத்தம் வருமென்றுந் துணிந்துகூறினமையால் நன்மையதேவமுக அட்டமாசித்திமட்டும் பெருகவுண்டாகுமென்ற கருத்தைக் கொண்டு இதன்மேற் கவியில் கூறியதுகாண்க மற்றதனிற்சொல்லியபடி ஊருக்கு மன்னனுக்கும் அதிகாரிக்கும் வர்தாலும் வரும் இதன்றியில் வளர்பிறைகாலத்தில் பிரதமை தப்பில் யாதேனுமிடர் வரும் துவிதிகை கலகம், திரிதிகை, பொருட்சேதம், சதுர்த்தி, போக்குண்டாகும் சகலவித நஷ்டந்தாக்குங் காண்க பஞ்சமி, பந்துகளுக்கு விபாதி, சஷ்டி, அத்தேசத்தாருக்கும் அரசனுக்கும் வருத்தம் சத்தமின்றி, அரசனுக்குந் தேசத்தாருக்குமே யுண்டு தனக்கில்லையென் றேமாந்திருத்தல் கூடாவாகுந் தன்னாலே யவர்களுக்கு வருத்தம்வந்ததென்ற அவதூறான பொய்ச்சாப்பினாலாவது தான் வருத்தப்பட வருமென்ற விவரம் மேற் கவியிற்றுனே செப்பியிருப்பதனைக் காண்க-எ-று. (26)

திதிபிழைக்கில் நிகழ்வன விளைவென்றும்
சந்திரசூரிய ரியல்புங் கூறுகின்றார்.

நோவுடனே சாவுமாமெட்டாகின் மற்றை நுவலாதபக்கமு
மிம்முறையேகொள்க, தானில்வெங்கதிரவன் மதியமுண்டாஞ் சந்
திரனுள் வெங்கதிருந் தப்பாதுண்டா, மோவரிய லிவர்களையே
யுன்னும்போதி லுற்றசாரங் குருமுகத்தா லுணர்ந்துகொள்க, தே
வர்பிரானுளைத்தருள் உமையாள்கேட்டச் செவ்வியிதன் முறைமை
தனைத் தெளிந்துதேறே.

(இ-ள்.) அஷ்டமி பிழைக்கில் நோவுடன் சாவும் வரும் வளர்பிறை யின்னமிருக்கத் தேய்பிறைக்கு மிம்முறையே கொள்வது இதல்லாமலும் சூரியனுக்குள் சந்திரனும் சந்திரனுக்குள் சூரியனுமொன்றக்குளொன்று கரந்து தோன்றுவதுமுண்டாம் உமையவளே தன் சுயவல்லமையினால் தெரிந்துகொள்ள வல்லவரல்லவராகிப் பின் சங்கரனருளினால் தெரிந்துகொள்ளத்தக்க சிறப்பினதாகில் இந்நூலை யார்தான் தம்மாற்றாமே தெரிந்து கொள்வார் கொள்ளமாட்டார்கள் ஆதலால் குருவருளினாற் றெளிக-எ-று. ()

மேற்கவிகளிற்கூறிய சரம்பிழைக்கில் இடர்வரும்

வந்தாலும் அதற்கு உபசாந்தங் கூறுகின்றார்.

தெளிகதிர் சேய்மூன்றடியாந் தெற்பந்தன் செம்பொன் மூன்றடிமேற்குத் திங்கள்வெள்ளி, யிலகியநாலடிவடக்குப் புந்திமுன்போ லிரட்டையது கிழக்கிரவி யெழுதன்முன்னே, வளமுடனே பூரணபக்கத்திற்சென்று வந்திருந்துநமைநினைந்து வழுத்தல்செய்தே யுளமகிழ்ந்து போகிலெல்லாம் பலிக்குந்துன்ப முண்டாகாவிவையனைத்தும் உணர்ந்துதேறே.

(இ-ள்.) பெண்ணே மேற்கவிகளிற் சொல்லியபடி காலசரஞ் சரிப்பட்டுவருமோ வாராதே ஊழ்வினைப்படிக்கல்லவோ நடக்கும் அதை நம்முடைய வசமாக்குவதற்கு இலேசோ எனத்தளர்வுற்றிருக்க வேண்டியதில்லை சரம்பார்க்கிறவன் முன்கவிகளிற் சொல்லியபடி பிராதகாலத்தில் அருணோதயத்திற்கு முன்னெழுந்து ஞாயிறு செவ்வாய்க்கிழமைகளுக்குத் தென்புறமாய் மூன்றடிமுன் 11-ங் கவியிற்சொல்லியபடி சரத்தை பூரணமாக்கியக்காலையே முன்னிட்டுக்கொண்டு போகவும் சனி வியாழங்களுக்கு மூன்றடி மேற்கே போகவும் திங்கள் வெள்ளிக்கு நாலடி வடக்கேபோகவும் புதனுக்கு இரண்டடிகிழக்கே போகவும் இப்படியாகப் போய்வந்து ஒரு திவ்வியமாகிய ஆதனத்திலிருந்து என்னை நினைத்து துதிசெய்து பின்னெழுந்து எங்கே சென்றாலும் அல்லது எங்கேயிருந்தாலும் முற்கவிகளிற்கூறிய துன்பங்கள் யாதேனு மடாது-எ-று. (28)





இதன் மேற்கவிகளிற்கூறிய ஒருவாரத்திற்குச் சரந்

தப்பில் இன்னவையாமெனவும் ஏழு

நாட்களுஞ் சரிவரில் இன்னின்ன

வையா மெனவுங் கூறுகின்றார்.

தேறுநீ யிவையெல்லாஞ் செவ்விதாக செங்கதிரோன் றன்னுளிற்றிங்களோடி, மாறிவருங்கதிரவனுஞ் சோமனுளின் மறிந்தோடி வருங்கிழமை யேழுமாறிற், கூறபடவுடனுயிர்விட் டேகுமெனக் குணமாகுமிக்கிழமை கோணாதோடிற், சிறிவருங் காலனையுஞ் செயிப்பர் மற்றச் சித்தயோகத்துநிலை சித்தியாமே.

(இ-ள்.) இவையெல்லாந் தேர்ந்தறி சூரிய னடக்கவேண்டிய நாளிற் சந்திரனடந்து சந்திரநடக்கவேண்டிய நாளிற் சூரியநடந்து இப்படியாக மாறுபட்டு ஒருவாரமுழுதும் நடந்தால் மரித்துப் போவன் அப்படியல்லாமல் கிழமை யேழுந் தவறாமல் மேற்கண்ட நாழிகையுங்கோணாமல் திக்குநோக்கிச்செல்வதுடன் பிராணாயாமமு மாறாமல் நிகழ்ந்துவருமாகில் இயமனடரான் பிராணனுக் கழிவில்லை சிவன் முத்தனால் வாழ்ந்திருப்பன் அஷ்டமாசித்தியு மவனுக்குச் சித்திக்கும். (29)

குறிசொன்னமார்க்கங் கூறுகின்றார்.

சித்தமுடனிரேசகத்தில் வந்துகேட்டால் செப்பியவப்பொருள்களெல்லாந் தீதேயாகும், உத்தமமாம் பூரகத்தில் வந்துகேட்டால் உரைத்த பொருளத்தனையும் உண்மையாகும், மெத்திய கும்பகத்துரைக்கி னன்றேயாகும் வேண்டாரை ரேசகத்தில் விளியப்பார்க்க, வைத்தமலம் வாயுநீர் கழிபோதென்னின் மாற்றலர் தங் கெடுவரிது மாறிலாதே.

(இ-ள்.) சரம்பார்க்கின்றவன் ரேசகஞ் செய்போதில் வந்து கேட்டால் கேட்டகாரியஞ் சித்தியாது பூரகத்திலென்னில் நன்மை அவன் சொல்லுகிறது முண்மையாயிருக்கும் கும்பகஞ்செய் காலத்திலாகில் நற்காரியமது சித்திக்கும் மலஞ்சலம் வாயுகழியும்போதானால் பகைவர் கெட்டுப்போவார்கள் இன்னமிதற்குவிபரம் குருமுகாந்தத்திற் றெரிந்துகொள்ள வேண்டியது அல்லாமற் றெரியாது எ-று.

## சனிவியாழபலன் கூறுகின்றார்.

மாறிவ்வளர் பக்கங்குறையும் பக்கமதிநாடி கதிர்நாடி வளர்பொன்னேடித், பேறுமிக வுண்டாகும் பிராணனிற்கும் பின்புரைத்த காரியங்களெல்லாம்பேறுங், கூறுகின்ற சனிநாளிற் பகலிரவிற்குலவுசரம் வலமிடத்திற் கோணுதோடி, நாறுமலர்ப் பெருந்திருவேசொன்னே மிந்த ஞாலமெங்கும் புகழ்பெறவே நடக்குமென்றே.

(இ-ள்) வளர்பிறை வியாழத்திற்குச் சந்திரனும் தேய்பிறை வியாழத்திற்குச் சூரியனுந் தப்பாமல் நடந்துக்கொண்டே வந்தால் சிறந்த பேறுண்டாகும் சீவன்முத்தனாய் தளர்வின்றிவாழ்வன் இதல்லாமல் சனிக்கிழமைக்கு இரவிலும் பகலிலுஞ் சந்திரசூரியசரங்கள் மாறுபாடில்லாமல் நடக்கவேண்டியது நடந்தா லிவ்வுலகமெங்கு மெச்சத்தக்க கீர்த்திவந்துறும் மற்றும் முன்காலசாஞ்சொல்லிய கவியை நோக்கவேண்டியது. (31)

## குறிசொல் மார்க்கங் கூறுகின்றார்.

நடப்புடையவொருவ னெங்கே யென்றொருவன் கேட்பதினு னிலத்திலகத்திருப்ப னன்னீர்முற்றம், அடங்குமழுவாகி லுன்னூர் வாயுவேற்றா ரம்பலமேன் மலைமேற் றுயிலலாகும், விடப்போனான் புவிக்குநிலை நீர்க்கு மீண்டான் வெவ்வழற்கு வருமின்றான் வெயில்காலுச்கு, மடக்குழலாயூர்வந்தான் வானமாகில் வருவனொருநாழிகையின் மாறிலாளே.

(இ-ள்) ஒருவன்வந்து இன்னானெங்கே யிருக்கிறானெனில் அப்போது சரம்பிருதிவாகில் வீட்டுக்குள்ளிருக்கிறான் அப்புவாகில்முற்றத்திலிருக்கிறான் தேயுவாகில் அக்கிராமத் தெல்லைக்குட்டானே யிருக்கின்றான் வாயுவாகில் எல்லைக்கப்புறப்பட்டான் ஆகாயமாகில் மலையேறுகிறான் அல்லது தூங்குகிறானென்று சொல்லவேண்டியது இது விடபுறத்தேசம் போனவனைக்குறித்துக் கேட்டபோதுபூதிய மைந்தில் முதலாகில் அவ்வூரில்தானே நிலையா யிருக்கிறான் இரண்டாகில் திரும்பிவருகிறான் மூன்றாகில் திரும்பினவன் நில்லாமல் நடந்து வருகிறான் நான்காகில் அவனிருக்கு மூருக்குள்வந்தான் ஐந்தாகில் ஒருநாழிகைக்குள்வந்து வீடுசேர்வானென்றுசொல்லவேண்டியது-எ-று.





## இச்சரம் மனதுடன் லயப்பட்டால் இன்னவையா மெனக் கூறுகின்றார்.

மாறிவருவாயு மனோலயந்தன்னின் மரிக்கவுயிர் சித்தி நிற்க வதுதானிற்கும், கூறுசமயங்கூற்றாற் பயமுமில்லை குறித்திருமன்னொன்றரை நாழிகையாக்கொள்க, தேறபுதற்கொன்றேகால்வன்னிக்கொன்று சீவன்முக்கா வானமரை சிறந்தநாடி, பாருமைந்து நாழிகைக்குள் வரிவனற்குன்றிற் பழுதுபடு முடம்பிலீது பற்றிப்பாரே.

(இ-ள்) இடதுபக்கத்திலும் வலதுபக்கத்திலும் ஒன்றைவிட்டொன்றை மாறிமாறிநடக்கு மிச்சரமானது தேய்த்தினூடே லயப்பட்டுநிற்கில் மனமுதலிய வந்தக்கரணங்களுக்கும் வேலையில்லை அசைவற்றிருப்பனவாகும் பின்பு மற்றெச்சமயத்தாராலும் பயமில்லை எமனாலும் பயமில்லை முன்சொன்னபடி இடதுபக்கமும் வலதுபக்கமும் மாறியோடுஞ் சரம் ஒவ்வொருபக்கத்தி னென்னேரந்தரித்து நடக்குமென்னில் ஐந்துநாழிகையாம் அதிலும் பூதிபங்களின் கூறுக் கெவ்வாறு பகுப்பதெனில் மண்ணில்-ஒன்றரை நாழிகையும் நீரில் ஒன்னேகால் நெருப்பில் ஒன்றும் காற்றில் முக்காலும் வெளியில் அரையும் ஆக நிறைந்தோடும் இப்படியாகிய பூதிபங்கள் கூறுகொண்ட ஐந்து கடிகைகளும் ஒவ்வொரு பக்கத்திற்குச் சரியாய்ச் சிதையாதோட வேண்டியது இதைவிட குறைந்தாலும் வளர்ந்தாலும் தேககலியாம் இச்சரம் லயப்படும் வழிதேடவேண்டியது தேடில் முன்கண்ட பயனுண்டாம் இல்லையேல் நாடியொன்றுக்கு ஐந்துநாழிகையும் பூதிபங்களினளவே சிதறாமல் நடப்பிக்கவேண்டும் அதுவுமின்றெனில் தேககலியேவரும் எ-று. 33

## தத்துமதுவாழ்நாட் பிரமாணமறியும்படி அயன் சங்கற்பங் கூறுகின்றார்.

பத்தினான்சொன்னபடி பயன்முன்னாட் பகலொருபோதுண்டு பரிசுத்தனாகி, மற்றைநாளுத்தமா மயனந்தன்னின் மாறிபிடந்தனிலோடும்வலங், தெற்காகும் பெற்றதொரு நாழிகைதானைந்தாறும் பெருங்கடிகை தனிற்குறைபிற் பிராணனுசை, முற்றொரு மா நாழிகைக்கோ ராண்டொழு முறையேநான் சொன்னகணக் குண்மைதானே.

(இ-ள்) சரம்பார்க்கிறவனுக்குச் சென்றநாட்கள் போகமற்றும்நின்ற நாட்கள் எவ்வளவோ என்னுங் கருத்துக்கொண்டு பார்த்

து தெளியுமாறு யாதெனில், அயனசாமம் அதனைப்பார்ப்ப தெவ்வாறெனில் தைமாதமுதற்றேதியில் உத்தராயணகாலம் ஆடிமாத முதற்றேதியில் தக்ஷணாயனகாலம் இவ்வயனகாலத்திற்கு முன்னாள் பகலில் ஒருபொழு தன்னமுண்டு தத்துவங்களைப் பரிசுத்தமாக்கித் தேகமெலிவதனால் மனதுக்கும் மற்றவாயுவாதி கரணங்களும் வருமிடையூறினை நீக்கி தைமாதமுதற்றேதியில் பொழுதுவிடிய ஐந்து நாழிகை இருக்கையில் பார்க்கும்போது சரம் வாரம் திதி நட்சத்திரங்களைத்தள்ளி இடதுபக்கத்திலுதித்து முன் கவிகளிற்சொல்லியபடி ஐந்துநாழிகைகளுந் தெறாமல் ஓடும் அதனைப் பார்க்கவேண்டியது இதுபோக ஆடிமாதமுதற்றேதியில் இதேபிரகாரமாய்ப் பார்க்கவேண்டியது அப்போது சரம் வலதுபக்கத்திலோடும் அப்படியோடியசாம் முற்கூறியவண்ணம் ஐந்துநாழிகைகளுந் தெறாமலோடினால்சரம்பார்க்கிறவன்தான்செய்யும்பிராணாயாமம் உதவினால் அன்று தொட்டுவரும் நூறுவருஷகாலம் வாழ்ந்திருப்பன்இதுவின்றி குறைந்தால் அவ்வைந்துநாழிகையை நூற்றொருமைந்தாக நூறாக்கிக் குறைந்தநாழிகை ஒருமாவோ இரண்டுமாவோ அல்லததன்மேற்றொகைப்பட்டனவையோ அதற்கு ஒவ்வொரு வருஷத்தைக் கூட்டிப்பார்த்து குறைந்த ஒவ்வொருமா நாழிகையின்பேரில் கணக்காக்கிக் கொள்ளவேண்டியது முழுவதுமேதப்பிச் சரம் இடத்திற்குவலமாகவும் வலத்திற்கு இடமாகவும் ஓடில் அவனுக்கு க்ஷீணகாலமென்றறிக எ-று.

## போஜனவிதி கூறுகின்றார்.

உண்பவனுக் கப்புவிட மதிக்குவெய்ய வுவத்தன கைத்தனசார்தலுங்கமுன்னே பண்பயில் செங்கதிர்க்கு நெய்பால் புளித்தல் கன்னல்பாகுடனே துவர்த்தனமு முண்டுபார்க்க, நண்பமையவயிற் றிற்குச் சோறுபாதி நன்னீர் காலகாற்றுக்கலாக நல்கி, கண்டயினாடிகள் சுத்திபண்ணி தூபங்காட்டி மலர்சூட்டி கழிபுங்காலே.

(இ-ள்.) முன்கவியிற்சொல்லியபடி சரம் சார்க்கிறவன் சூரியகலை இயங்கி வருகிறமட்டும் போஜனமில்லாமல் மற்றதனுக்காக காக்கவேண்டியதில்லை சந்திரன் நடக்கும்போதுஞ் சாப்பிடலாம். எப்படியெனில், உஷ்டமான பண்டங்களும் உப்பு கசப்புகாரலாகிய பண்டங்களை வைத்துக்கொண்டு தாகபானத்தை நிறுத்திபுண்ண வேண்டியது சொல்லியபடியே சூரியன் நடக்கில் நெய், பால், புளித்தல், தித்தித்தல், துவர்த்தலாகிய பண்டங்களுடனே சாப்பிடலாம்



தாகபானமுமப்போதே செய்யலாம் சந்திரனுக்கு அப்போது கூடாதாயினும் பின்பு சூரியன் நடக்கில் சாப்பிடவேண்டியது இதுமாறினாலும் ஆத்திரத்தினாலும் அவசியனாலுஞ் சூரியனுக்காக காத்திராமல் அடித்தடுத்துச் சந்திரனிற்றானேதின்று கொண்டுவந்தாலும் நலியாம் இப்படியாகச் சாப்பிடுகிறதாயினும் அவ்வுணவு வயிற்றிற்குப் பாதிதானாகும் மிஞ்சிலாகாது மற்றப்பாதிக்கு சலங்களாகவும் வாயுக்களாகவுங் கொள்ளவேண்டியது கொண்டு தசநாடிகளையும் பிராணாமுன்னிலையில் சுத்திசெய்து ஏகாக்கிரசித்தனாய்ச் சாம்பார்க்கவேண்டியது. எ-று. (15)

## சரத்தை ஏறவொட்டாமலுங் குறையவொட்டாமலுந் தன் வசப்படுத்திக்கொள்ளு மார்க்கங் கூறுகின்றார்.

கால்கொண்டு கணக்கறிவார்க் கிபாதுந்தப்பா சுருதியவெல்லா முடியுங் காண்போர்க்கெல்லா மேல்கொண்ட புவியுடனேயப்புவன்னி விளங்கியகால் வான்முடன் வினவுவார்க்குப், பால்கொண்ட மொழியாளே பவனக்கட்டிப் பற்றியவாராதாரப்பரிசு பார்த்துச், சால்கின்ற முதனாடி தன்னுணின்ற தபனன்மதி செந்தழலாந் தன்மையாரே.

(இ-ள்.) பால்போலு மினியசொல்லையுடைய பெண்ணே சரம் பார்க்கிறவனுக்கு அனுபவமிந்நூற் சொல்லியபடி வருமோ மற்றவ்விதிப்படி பிறழாத போஜனமுறையும் வந்தொத்துக் கொள்ளுமோவெனினுங் குறையினும் கோபசெய்யுமே எளிதிற் சரிப்படவராதே யாதெனில் தானெப்படி நன்னடைவன் வினவுவார்களுக்கெவ்வாறும் நன்றெனவுந் தீதெனவு மறிந்தெடுத் தோதுவனென்று ஐயமுறவேண்டியதில்லை. சாம்பார்ப்பான் பரம்பார்ப்பானென்பதுபோல் சரத்தைக் கணக்கின்படியறிந்து பார்க்கிறவனுக்கு எந்தகாரியமானாலுந் தப்பிப்போகாது. அவனைக்கண்ட பேர்களுக்கும் நினைத்தகாரியமெல்லா முடியும். அதெப்படியெனில் பிருதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாயமாகிய பஞ்சபூதங்களின் கூறுகூடியவாயுவினைப் பாழ்போகாமல் மனமறிவுடனே கட்டி ஆறாதாரத்திலுள்ள பரிசினையறிந்து தசநாடிகளிலும் முதனாடியாகிய பிராணநாடியிலின்று மற்றங்கிருந் துதித்தோடுஞ் சந்திரன்

சூரியன் வன்னியென்னுமிம்மூன்றினுடைய குணங்களையும் பார்த்தால் கைக்கனிபோல் இலேசிற் றெரியவரும் எ-று. (36)

### சரம்பார்க்கிறவனுக்கு நன்மைதீமை மரணகால மறியும்படி சாயாபுருஷதெரிசனங் கூறுகின்றார்.

பாரிலொத்த நிலத்தகல்வான் களங்கமற்றோர் பத்தடிக்குளஞ் சடியாம் பருவந்தன்னிற், சிறியமெய்ந் நிழல்கழுத்து கைகால்சென்னி சிமிட்டிப் பார்த்திமையாற் றிகழ்வான்பார்க்கிற், கூருருவம் பொன்கண்டாற் செல்வம்வெள்ளை குறையினுயிர் மெய்ம்மையுயிரிளைக்குங் குற்றங், காருருநோயாறுபிறை கைகால்குன்றிற் கங்குறையின் முப்பிறையிற் காட்டுஞ்சாவே.

(இ-ள்) பூமியிலே மேடுபள்ளமில்லாத இடத்தில் ஆகாயத்தில் மேகமறைவில்லாமல் வெயிற்காயும்போது தன்னிழல் அஞ்சடிநீள முதல் பத்தடிக்குட்பட்ட தருணத்தில்தான் அந்நிழல் முகமாய் நின்று கைகளிரண்டையும் தொங்கவிட்டு கண்களிமையாமல் அந்நிழலில் தலை கழுத்து கைகள் கால்கள் இவ்வுறுப்புகளி லொன்றைப்பார்த்து அப்படியே இமையாமல் ஆகாயத்தைப் பார்த்தால் அங்கே அவனுருவந் தோன்றும் அவ்வுருவம் பொன்னிறமாயிருந்தா லவனுக்குச் செல்வம்வரும் வெண்மையெனில் பிராணபயமில்லை ஆயுள்வரும் செம்மையாகில் ஆயுள்தேயும் அதற்கொரு குறைவும்வரும் கருமையேல் நலி இதுவிட அவ்வுருவில் கைகளாவது கால்களாவது தோன்றாமலிருந்தால் ஆறுமாதங்களும் மரணம் இதுவன்றித்தலையே காணாமல் கவந்தமாய்த் தோன்றில் மூன்றுமாதத்தில் மரணம் இதல்லாமலும் சந்திரனிலுமிப்படியே பார்ப்பதுமுண்டு இதனை மாயாபுருஷ தெரிசனமென்றுஞ் சொல்லுவார்கள் இச்சாயாபுருஷ தெரிசனத்தை விடாமல் பன்னிரண்டு வருஷம் பார்த்துக்கொண்டிருந்தால் தன் முன்னிற்குமந் நிழல் தன்னுடன் பேசும் பேசில் அதன்முகாந்தரமாய் அஷ்டமாசித்தியையும் பெறலாகும் பெறுவதன்றிப் பின்னுஞ் சிலநாட்களில் அந்நிழல் ஓராளுருவமாகித் தன்னுடனே திரியும் படுத்தால் தானும் படுக்கும் எழுந்தாலுடனெழும் இவனுக்கு வரும் நன்மை தீமைகளை முன்னதாக வுணர்த்தும் இன்னமுமிப்படிப்பட்ட அனேக மற்புதங்கள் விளைக்குமென்று பெரியோர் சொல்லுவார்கள் எ-று.







### மரணவிலக்கணம் வில்லுருவின்பங்கள் கூறுகின்றார்.

காட்டியகானிற்றனக்கு முன்பினுகக் கடிபுனல்வாய் கொண்ட கல்வான் களங்கமற்றால், பூட்டியநீர் அகன்பிறக்க வுமிழ்தால்வானிற் பொருந்தியவில்லைந்துருவாய்ப் பொலிந்துதோன்ற, மீட்டியவில்லுருவுளதே லாண்டுவாழ்வ னிதுமுறியிலவ்வாண்டி னிறந்துபோவான், கோட்டியவில் லுருமுறிய வணங்குதோன்றிற் கொண்டுபோம் பிறையாறிற்குறித்துக் கூறே.

(இ-ள்) வானிற்கலங்கமில்லாமற் சூரியனெறிக்கையில் மாநிழல் வீட்டுக்குத்தாழ்வாரநிழல் இப்படிப்பட்ட யாதொரு நிழல்தனக்கு முன்னிருக்கச் சரம்பார்க்கிறவன் பின்னின்று வாய்நிறைய சலங்கொண்டு அந்நிழலருகில் அகப்படாது அணுப்போலப்பறக்க ஒரேதாமாய் உமிழ்ந்து அத்துகளை பார்த்தால் அதிலிந்திரதனுசு அவ்வைந்து வர்ணங்களுடனே தோன்றும் தோன்றில் பார்க்கிறவனுக்கு அன்றுமுதல் ஒருவருஷமட்டுக்குஞ் சாவில்லை இல்லையேலதுவரும் வருவதிலும் அவ்விலக்கிறகாறி மங்கனே ஒரு பெண்ணுருத்தோன்றில் ஆறுமாதங்களிலிறப்பன எ-று. (38)

### சந்திரசூரியரைப்பார்க்கு மிலக்கணங்கள் கூறுகின்றார்.

குறிகொண்ட நிறைமதியங் குறைமதியந்தன்னிற் குலவியதோர் செப்பகலிற் கோர்நெய்விட் டெரிகின்ற மதிக்கதிரைப் பகற்கதிரை பார்த்தாலியலவெண்மை செம்மைபொன்மை பசுமை கறுப்பென்னிலெனி, கொண்டவுயிற் வாழ்வுகெட னோப்சாதலினை நிறையேயறியிதனிற் தெற்கும்மேற்கு, மறிவென்றவடக்குடனே கிழக்குமே குறைந்தாலாண்டு திங்களாறு மூன்றொன்று நாட்பத்தழிவே.

(இ-ள்) ஒரு செப்பகலில் பசுவின்நெய்யையுருக்கிவிட்டு அதிற் பூரணசந்திரனை யல்லது அமாவாசையின்போது சூரியனைப்பார்த்தால் அதிற்றோன்றுகின்ற சந்திரன் அல்லது சூரியன் வெண்மை செம்மை பொன்மை பசுமை கருமை இவ்வைந்தில் ஒன்றுள்ளதாய்த்தோன்றும் அதில் வெண்மையேல் பிராணபயமில்லை செம்மையெனில் வாழ்வுண்டாம் பொன்மையாகில் கேடு பசுமையானால் நோய் கருமையோ சாவுவரும் அதிலுமப்படிச் சாகிறவனுக்குக் காலமெப்போதெனில் தென்புறவட்டங் குறைந்தால் ஒருவருடம் மேற்புறவட்டங் குறைந்தால் ஆறுமாதம் வடபுறம் மூன்றுமாதம்

கீழ்ப்புறம் ஒருமாதம் நடுவே தொள்ளையாயிருந்தால் பத்துநாள் நிறைமதியன் பெருணைகுறை மதியம் அமாவாசையென்றறிக-எ-று

## சரீரபழுது முதலான மரணவிலக்கணங் கூறுகின்றார்.

அழிந்திடுங்கைகாநெற்றி கன்னந்தம்மிலடர்ந்து துடிப்புறி வாண்டு திங்களாறு, மொழிந்ததிங்கள் மூன்றுநாள் பத்திலாவி முடிந்துவிடு மிதுவொழிய செவியிலோசை, யொழிந்திடுநா ளேழு கண்ணிலொளிதானைந்தா முயர்ந்தமணமூன்றிரண்டி னுரைவேறு னால், கழிந்திடுநல்லுயிரென்று கருதியீசன் கழலிணையைப் போற்றில் வினைகழிந்து போமே.

(இ-ள்) கை, கால், நெற்றி, கன்னம், இவை அடர்ந்து துடித்தால் மரணகாலம் வந்ததென்றறிக அதிலும் கை துடிக்கில் ஒரு வருஷம் கால் ஆறுமாதம் நெற்றி மூன்றுமாதங் கன்னம் பத்து நாள் என்று கொள்ளவேண்டியது. இதுவொழிய காதுகேளாவிட்டால் ஏழுநாளில் மரணம் கண்பார்வை மழுங்கில் ஐந்துநாள் மூக்கில் கந்தம்போனால் மூன்றுநாள் வாக்குழறிப் பேச்சழிந்தால் இரண்டுநாள் இதையறிந்து கடவுளுடைய பாதங்களை நினைந்துபோற்றி செய்தால் வினையென்பதிராது அங்ஙனே கலந்துபோதலுமாகும்-எ-று. (40)

## உசுவாச நிசுவாசங்களின் பயனும் கூறுகின்றார்.

போங்வாயு சிவமுள்ளே புகுதற்சத்தி போகில்விடம் புகிலமுதம் புகன்றவெல்லா, மாம்வாயு புகிற்போகி வல்லவாகு மடங்கில் விடங்கெடும்போகி லகலும்பாவர், தேமேவுசத்தி யிரண்டொற்றை யீசன் செவியிற் போவார் வருவர்சா மீளுமாகில், ஓமேவுமுயிர் போகி னோயாவற்றதுட்புகினோ யாகாமெய் யுரைத்தோ னர்மே.

(இ-ள்) உசுவாசம் நிசுவாசம் அல்லது ரேசகபூரககாலபலனைச் சொல்லுமிடத்தில் உடலைவிட்டுப்போகிற வாயுவே சிவம் உட்புகுவது சத்திசரம் வெளிப்பட்டுப் போவதெல்லாம் விஷமுண்பதற்குச் சரி உட்பட்டுப் புகுவதெல்லாம் அமுதமுண்பதற்குச் சரி சரம் உள்ளே போகும்போது ஒருவன் சொன்னது அல்லது நினைந்த காரியம் ஆகும் வெளிகொள்ளுகையில் ஆகாது அந்தவாயு கும்பகத்தடங்கில் உண்டவிஷங் கெடுமெனச் சரி அடங்கியது நகோடி





வழிபோகில் பாவமென்பதில்லை இதன்றியில் ஒருவன்வந்து குறிகேட்கையின் முதற்சொன்ன சொல்லின் எழுத்தை யெண்ணிப் பார்க்கில் ஒற்றையாகில் சிவன் கூறென்றும் இரட்டையாகில் சத்தி கூறென்றுங் கொள்ளவேண்டியது சரம் வெளியே போகும்போது ஒருவன்வந்து இன்னான் போவானோ வருவானோ வெனில் போவான் வரான் உட்புகையில் வருவான் சரம்போகும்போது வருவானோவென்றும் புகும்போது போவானோவென்றும் மாறுபட்டு வினவில் சரிப்படாது போகும்போது போவானேயல்லது வரான் புகும்போதுவருவானேயல்லது போகான் சரம்போம்போது நோய் தீருமோவென்னில் தீராது புகும்போது தீருமென்க-எ-று. (41)

## குறிசொல்லவும் போர்புரியவு மார்க்கங் கூறுகின்றார்.

உரைத்தொருவனிறைவிற்போய் குறைவிலுறத் தீதாம் உயிரில் புறத்துறைத்து நிறைபுறத்துற மத்திமமாம், நிறைத்தநிறை பக்கத்தினின்றிடி னன்மைபதாம் நிறைமதியந்தனி லேகிநேர்த்திடும் போர்க்களத்து, வரைத்தசெழுங் கதிர்வெட்டை வல்லவனே தோற்பன் வாகான சந்திரனே வெல்லமாட்டான், விரித்தகதிரினி லேகி வெங்கதிரில் வெட்டமேனியிலும் வடுப்பட்டான் வெல்வான் றானே.

(இ-ள்) குறிகேட்கவந்த ஒருவன் தன்காரியத்தைச் சொல்லிக்கொண்டே முன்னர் பூரணத்தில் வந்தாலும் பின்னர் சூனியத்தில் வந்துவிடுவானாகில் அக்காரியம் தீதாம் முன்பு சூனியத்தில் நின்று பின்பு பூரணத்தில் வருவானெனில் மத்திமம் இவ்விரண்டு மாறுபடுமில்லாமல் வந்தவன் கதழாமல் பூரணபக்கத்திற்றானே யிருந்து தான்வந்த காரியத்தைச் சொல்லிமுடித்து விடுவானெனில் அக்கருமம் நன்கினதாம் என்றறிக போர்க்குறியைச் சொல்லுமிடத்துச் சந்திரகலை யியங்கும்போது சென்று சூரியனியங்கும்போது களத்திநேரில் எதிரி எப்படிப்பட்டவனானாலும் தோற்பன் இப்படியல்லாமல் சந்திரனியங்கும்போது புறப்பட்டுச் சந்திரனிற்றானே போர்க்களத்தில் தோற்பன் இதுநிற்க சூரியனிற்றானே புறப்பட்டு அச்சூரியனிற்றானே போரில் வெல்வதிலும் தன்மேலொரு படைபடாமல் வென்று வருவன்-எ-று. (42)

## போர்வெல்ல மார்க்கங் கூறுகின்றார்.

வெல்லவனபரிருவர்பே ரெழுத்தினையு மெண்ணின் மிகுந்தவெ ழுத்துடைய அ, இ, உ, எ, ஒ, வென்று, நல்லவெழுத்துடனே ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, கூட்டிநலந்திகழ் பாலன்குமர னரசனே விருத்தன், சொல்லுமவர் பேரின்முதலெழுத்தி னுயிரெழுத்தைத் துவக்கியவத் தானத்திற் றுசளறவேகூட்டில், எல்லைமுதற்றானத்தி லெழுத்து டையோன் வெல்லவிருவரையு மிவராற் சமிரட்டை யெழுத் தோனே.

(இ-ள்.) அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஒ, ஓ, இவைமுதலாவது பாலன் கூறெனவும் இரண்டாவது குமரன் கூறெனவும் மூன் றாவது அரசன் கூறெனவும் மற்ற விரண்டும் விருத்தன் கூறென வும் கொள்ளவேண்டியது இதில் சண்டைக்காரனுடைய பேரில் முதலெழுத்தைப் பார்க்கும்போது ஆவொலியே லாவுடனேயும் ஈயொலியே லியுடனேயும் ஊ வொலியேலூவுடனேயும் ஏ யொலி யேலேயுடனேயும் ஓவொலியேலோவுடனேயுங்கூட்டிக்கொண்டு அவர் களை இவ்வெழுத்துக்களின்படி பாலன் குமரன் அரசன் விருத்த னுக்கிபாலன் குமரனையும் அரசனையும் வெல்வானெனவும் விருத் தன் மற்றவர்களால் படுவானெனவுஞ் சொல்லவேண்டியது அதி லும் எ-ஏ ஒ-ஓ விருத்தன் கூறு இவ்விரண்டெழுத்துக்களைக் கொண் டவன் அவர்களாற் படுவான்-எ-று. (43)

## கருப்பக்குறியின்முறை கூறுகின்றார்.

இரட்டையாமுபயத்திற் கேட்டபிள்ளை யினியபூரணத்திலா ண்சூனியத்திற் பெண்ணாம், மருக்குழலாளிடத்துயிரை விடியற் கால மகிணன்வலத்துயிரதனால் வாங்கநட்பார், தரிக்குநிலம் புதன் வெய்யோ னப்புமந்தன் சந்திரறீவியாழஞ்சேய் தண்கால்வெள்ளி, நெரிக்கிய வம்பரப்பூதம் கிழமையிந்த நெறியிற்றன்மைமிக நிக ழுந்தானே.

(இ-ள்.) முன்சொன்ன கருப்பக்குறிகளுமல்லாம லிதுவுமொன் றெனக் காண்க யாதெனில் உபயசரங்கள் நடக்கும்போது கேட்கப் பெற்றபிள்ளை இரட்டைப்பே றெனலாம் எப்பக்கமா யிருக்கினும் பூரணபக்கம் ஆண் சூனியபக்கம் பெண் ஆனாலும் மேற்கவிகளிற் சொல்லியபயன்றருகுமெனக்கொள்க இதுநிற்க வைகறைப்பொ ழுதில் மனைவிக்குச்சரம் இடதுபக்கத்தில் நடந்து மகிணனுக்கு வலத்தி நடந்தாலதை யம்மகிணன் அவ்வலச்சரத்தாற்றுனை வாங்கி யுட்கொள்ளு மப்பியாசஞ் செய்துக்கொண்டு வருவானெனில் மனைவி யிவன் வசமாவாள் பிறன்முகநோக்குங் கருத்துமிலாள் அப்படிவாங்குவது பன்னிரண்டுதரம வாங்கி யுட்கொள்வதென் றுஞ் சொல்லுவார்கள் அல்லாமலும் வாசரங்கள் எந்தெந்தப் பூதி







யங்களி லுதிக்கவேண்டுமெனில் புதன் பிருதிவியில் ஞாயிறு அப் பில் சனியுந் திங்களும் தேயுவில் வியாழமுஞ் செவ்வாயும், வாயுவில் வெள்ளி ஆகாயத்தி லுதிக்கவேண்டியது உதிக்கில் அவ்வாறுஞ் சரி யாய்நடந்து அதனால்வரும் நன்மைகள்மிருபலனை விளைக்கும்-எ-று.

## இன்னதற்குமூல மின்னதென் றுங் கூறுகின்றார்.

நிகழ்புவிக்கு மூலநீர்வாயுசிவ னெறிதாது கனல்விண்ணை நினைக் குங்காலை, புகழுடனே பூதத்திற்குளதேசொல்க பொருள் சராசி வெய்யோன் புதுவெண்டியங்கள், மகிழ்கொள்திராசியா முபய ராசி மறங்கிளருஞ் சுழிமுனையாம் வாரந்தோறு, பகுதல்படர்ந்து யிர்பலிக்கு நிலைமைதன்னைப் பங்கயவாதத்திருந்து பரிந்துபாரே.

(இ-ள்.) பிருதிவிக்கு மூலம் 8-வர சிவன்-1 ஆகாது இப்படி நிரைநிரையே ஒன்றக்கொன்று ஆதாரமாய் வரும் அவைகளை விள க்க விஸ்தாரம் விபரமாய்ச்சொல்லவில்லை யாயினும் இதனையும் உபய ராசியாகிய சுழிமுனையையும் மற்றவற்றின் பயன் முதலிய கூறு பாட்டையும் பங்கயாதனத்திலிருந்து பரிவுற்று சிவயோகஞ்செய் தாலல்லது நன்குணர்தலரிது உயிர் பாழ்போகாது சிவன் முத்த னுதலுக்கு மதுமார்க்கமில்லையேல் அவம்போகுமென்றறிக-எ-று.

## மூன்றுநாடிகளின் முறைமை கூறுகின்றார்.

பாரிதனைக்கதிர்மதிச்சுன் வாழ்வுகேடு பண்டநிலையும் மூன்றும் பரிந்துகேட்கில், மேடருஞ்செல்வம்வரும் வெய்யோனாகில் வெண் மதியக்கேடாகும் விரைந்துவாயுந் தீரமிகுசுழிமுனைதானாகில் முன் பிற் சிறகானும்பெருகாது தேவரானோர், போருகில்வருமெனி னும் மதியில்வாரார் பொங்கியசெங்கதிர்வருவர் புகன்றோம்நாமே.

(இ-ள்.) நாம்சொன்ன இச்சரநூலைப் பரிவுடன் பார்ப்பாயாகச் சூரியன் சந்திரன் சுழிமுனையென்று மிம்மூன்று நாடிகளுள்ளும் வாழ்வுகேடு நிலைமையென்கின்ற மூன்றுகருமநிதானப் பலன்களைக் கேட்குமிடத்தில் சூரியனாகில் நன்மையையு மிகுந்த செல்வத்தையு மடைவார்கள் சந்திரனாகில் கேடுமுதலிய கண்ணியக்குறைவாகும் சுழிமுனையுந் தேவாதி தேவர்களாலே வசிகரப் பட்டவனாகிலும் செயாசெயத்தின் முன்னிலையில் வருமோவென உறுதியாகச்சொல்லி னுஞ் சந்திரனே அதிகமாக வியங்கிடில் வாரார் சூரியனே பதிகப் பட்டால் வருவாரென்று காண்க-எ-று. (46)

## இதுவுமது உயர்சாந்தங் கூறுகின்றார்.

நாதமுரைத்த தொகையளவுஞ் சூரியனோடாம் நன்மதியமேல்
வாயு நடக்குமாகிற், குழிளைத்தல் கிளையிளைத்தல் பொருள்கேடா
தல் சாகுவருண்டாதலிவை தப்பாதாகும், போமிடத்தின்மதியா
கின் மருத்தைப்போக்கிப் பொருந்துமடி யிரட்டித்துப் போகநன்
றாந், தேமருவுகதிராகி லுயிருள்வாங்கித் திகழும்வலக்காலெற்றிற்
செல்கநன்றே.

(இ-ள்.) முன்சொன்னபடி சந்திரனே யதிகமாய் நடந்தால் தமக்குக் கேடுவருவதல்லாமலும் பந்துக்களுக்கு மதுவேவாரும் சத்துருக்கள் தோன்றிவருவது தப்பாது சந்திரனிற் போகவேண்டிய காரியமல்லாத காரியார்த்தமாய்ப் போகும்போது சந்திரநடந்தால் சாத்தை நீளவெளிவிட்டு அப்பக்கக்காலையே யிரண்டு மூன்றடி முந்திவைத்துக்கொண்டு போகவேண்டியது சூரியனிற்போகவேண்டிய காரியமல்லாத காரியார்த்தமாய் போகும்போது சூரியனடந்தால் அச்சாத்தையேற உள்ளேவாங்கி அல்லது காலைமுன்விட்டுக்கொண்டு போகவேண்டியது அப்படிப்போகில் போகுங்காரியம் நன்று-எ-று. (47)

## சந்திரகலையினடக்கும் பூதியங்களைக் கூறுகின்றார்.

செல்லுமதிதனி நிலத்திற் சரித்திடிற்றின்வாயு சிவாலயங்
கன்மதிற்செய்கா லில்லங்கட்ட, நல்ல முடிசூட்டில் குடிபுகுதல்
போக்குநயந்து மரம்வைத்தனன்று நளிநீர்தன்னி, லொல்லைநறும்
வாவிகுளஞ் சோலைவைக்க வுழவிரைக்கமணமுளதே லுவக்கலாகு,
நல்லழலிற் றீப்பிணியாங் காற்றிலானை நற்பரிதே ரொட்டகங்க
ளுவாயோட்டே.

(இ-ள்.) சந்திரகலையில் பிருதிவுநடந்தால் சிவாலயம் மதிள் விடுகட்டல் குடிபுகுதல் போக்குசாந்திகழித்தல மரம்வைத்தல் இவை நன்றும் அப்புவாகில் குளமுதலிப் வெடுத்தல் சோலைவைத்தல் நிலத்தை உழுதல் விதைக்குதல் விவாகஞ்செய்தல் நன்றும் தேயுவாகில் பிணிதீர்த்தலாம் வாயுவாகில் குதிரைமுதலிய தேர்க்கப்பல் ஓட்டலாம்-எ-று. (48)

ஒட்டிய வானதிற் செபிக்கவிற்போர் செய்யபுள்ளமி பின்கலை
க்கு மொக்குமீதேசொல்க, நாட்டுமதி வெயிற்கதிரோன் றிக்கிலந்த
நாடிகளிற் பூரணைச்சொனன்றேபாகு, மீட்டுதிசை பிடித்தவை
கள் செயல்களாண் பெண்ணிபங்கிடலுஞ் சூனிப்பூரண மெழுத்
தும், வட்டமறமதித்தெண்ணி நிருமித்தற்கு வல்லவனே சரம
பார்க்க வல்லனன்றே.



(இ-ள்.) ஆகாயந்தில் மந்திரஞ்செபிக்க வித்போர்செய்ய நன்று இது சூரியகலைக்கு மொக்கும். இதுநிற்க சந்திரதிசையானாலும் அல்லது சந்திரனேயானாலும், சூரியனேயானாலும் வந்தவன் பூரணபட்சத்தி நின்றால் அவன்வந்த காரியம் நன்றும் இதுபோக திசை ஆண் பெண் சூனியம் பூரணம் எழுத்து இவைமுதலாய்ச் சொல்லப்பட்ட இச்சாநூலினுள் நுட்பப் பொருள்களைக் கண்டு இது இன்னதென்றும் அது இன்னதென்றும் நிருமிக்க வல்லவன் சரம்பார்க்க வல்லவன் அல்லாதவனல்லாதவ னென்றறிக.' (49)

## 'சரம்பார்ப்போனியல்பு.

நன்றானமறைவல்லோர் குலமானாலென் நாமுறைத்த சரநூலி
னடைதப்பாம, லென்றாரும் பார்ப்பவரேபூமிதேவ ரிசைந்தமானி
டப் பிறப்பி னின்பங்கொள்வார், குன்றுதமா ரவை பெரும்புதா
னும் பொடிபருந்தினையிந்து கொண்டுவாழ்ந்து, பென்றானதெய்
வீகம் பொருந்துவார்கள் புகுதுவார் பின்பிறப்பிற் புகலாதாரே.

(இ-ள்.) நல்ல பிராமணக்குலத்தாராய்ப் பிறந்தாலு மென்ன அல்லது இழிவானகுலத்தில் பிறந்துமென்ன இச்சாநூலுணர்ந்து இதன் நடைதப்பாமல் பார்ப்பவரே பிராமணராவர் சாசரங்களினுடையத் தன்மைகளை யறிந்தவராக இப்பூமியின்கண் இவரே தேவரென யாவராலும் பூசிக்கப்பட்டு வாழ்ந்து பரம்பொருளிற் சாயுச்யமடைவர் பார்க்கமாட்டாதவர் இழிந்த குலத்தினராய்ப் பின்பிறப்பிற் பிடித்துக்கொண்டிருப்பார்கள்-எ-று. (40)

பின்பிறப்பிற்பிறக்கினுஞ் சற்குருமுகத்தாற் பொருந்திய இச்
சரநூலைப் புகழுகேட்டு, நன்குணர்ந்து நெறிநடப்போன் யாவரே
னும் நாமவினென்றிரண்டில்லை நல்லகேட்கின், மின்பிறக்குஞ் செ
ந்தழலைபடுத்தவெல்லா மிக்கதழல்வடிவான விதமேபோலத், தன்
பிறப்பிலினிபிறவான் வசமேசாகான் சடைமேலணிந்தசந்திரன்.

(இ-ள்.) இழிந்தகுலத்திற் பிறந்தவனானாலுங் குருமுகமாந்தாமயில சரநூலைச் சொல்லக்கேட்டு இதனையுணர்ந்து இவ்வழி நடப்பவன் யாவனானாலும் அவன் யாமேயாவன் வேற்றுமை யில்லை நெருப்புதன்னை யடைந்தவற்றையுந் தன்னுருவாக்கிக் கொள்ளுமியல்போல் அவன் யாமேயாவன் அவமாய்ப் பிறந்திரவான் இனனம் விசேஷமாய்ச் சொல்லுமளவில் சடாபாரத்தில் நாமணிந்திராநின்ற சந்திரன் போன்ற என்முடிமேல் வீற்றிருப்பான்-எ-று.

அகஸ்தியர் ஞானசரநூல்
முற்றிற்று.

---

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

தெய்வீகத்தன்மை விளங்கிய
ஒளவையார் திருவாய்மலர்ந்தருளிய

# உயர்ஞான சர நூல்.

---

## முகவுரை.

அநாதிமுத்த சித்துருவாயும், அகிலகாரண சம்ரக்ஷகார்த்த சிவேஸ்வரனும், சுத்தசைதந்யக் கடவுளாயும் விளங்காநின்ற ஆதி நாயகனாகிய பரமசிவனின் திருவருளா லினிதோங்கும் அன்பர்காள்! அலைகடற்சூழ்ந்த அவனியின் கண் அளவிடற்கரிய பிறவிகளில் மேலான பகுத்தறிவுடைய மானிடர்கட்குச் சிவாகமங்களில் விதித்துள்ளனவாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்குபாதங்களினும் யோகமே ஞானத்தை அடைவதற்குறித்தான மார்க்கமாக விருத்தலினாலும், ஆராயுமிடத்து யோகமின்றி ஞானங்கிட்டுத லரிதாதலினாலும், இத்தகைய யோகசாதனையை அப்பியசிப்பதற்கு வாசியை வசப்படுத்தலே ஏற்றத் துணைக்கருவியாயிருப்பதினாலும், அவ்வாசியை நிலைப்படுத்திக் கைவல்யமாக்கு மார்க்கத்தையும், அதனது விபரத்தையும் போதிக்க வல்லதாயும், இதுகாறும் பஹிர்முகமாக வெளியிடப்படாததும், (தெய்வீகத்தன்மைபொருந்திய ஒளவையார்) திருவாய்மலர்ந்த அருள்வாக்காகவும், மஹான்களால் அனுபவித்தும், அனுசரித்தும் வராநின்ற "உயர்ஞான சரநூல்" என்னும் அருஞ்சாத்திரத்தைப் பல்லோருமெளிதிலுணர்ந்தொழுகுமாறு விளக்கல்வேண்டுமெனும் பேரவாவானது நெடுநாட்டூண்டவும், புல்லறிவாளனாகிய யானும் என்னுளியன்றவரையில் குருமூர்த்தத்திற் றெளிந்தவண்ணம் "சுருங்கச் சொல்லல் விளங்கவைத்தல்" எனும் ப்ரமாணத்திற் கொருவாறிணங்க வசனரூபமாக இந்நூலைத்தொகுத்தும், இதனுடன், (சுழுமூர். நேடிவ் டாக்டர் வீ. இராமலிங்க தேவர்களருளிய "தினக்கிரமாலங்காரச்சருக்க" மென்னுஞ் சாஸ்திரமானது ஷை வாசியோக அப்பியாசிகளியாவருக்கும் அதிகப் பயன் படுமாதலாலதை இந்நூற்குப்பின் இரண்டாம் பாகமாக வமைத்தும், ஷை சரயோக சாதனைகளுக்காக ஏற்படுத்தியிருக்கும் கற்பமாதி ஔடதங்களையுந் தாமேசெய்தும் அன்றேல எம்மிடத்து விலைக்கு வா





ங்கியுமுண்டு சுகதேகிகளாய் அறம், பொருள், இன்பம், வீடு என்னுஞ் சதுர்வித புருடார்த்தங்களைப் பெறுவார்களென்று இதைப்பிரசுரஞ்செய்யலாயினேன். இதிற் சொற்குற்றம், பொருட்குற்றம் இவைமுதலானவை யிருப்பினும் பொருட்படுத்தாது சாதுக்க ளிவ்வரிய நூலை அங்கீகரிப்பார்களெனக் கோருகின்றனன்.

இப்படிக்கு,
ஆலந்தூர் கு. மஹாதேவ முதலியார்.

---

உ
சிவமயம்.

ஒளவையார் சர நூல் உபதேசித்தருளிய

# சரித்திர சங்கிரஹம்.

---

சில காலங்களுக்குமுன் பாண்டியநாட்டில் ஒரு வேளாளன் தன் சிறுவயதில் தன் தந்தையால் கல்விக்கழகத்திற் கனுப்பப்பட்டும் அறிவீனனாயிருப்பதைநோக்கிய தந்தையானவர் அடா துஷ்டா! பள்ளிக்குப்போவது பிள்ளைக்கழகென்பது அறிந்த உனக்கு உபாத்தியாயர் சொல்லும் ஒரு மொழியேனும் மனதிற்பதியவொண்ணாதாவென்று மனஞ்சலித்துக்கொண்டதின்பேரில், இவனும் மனதுறுதிக்கொண்டு தந்தையிஷ்டப்படி பள்ளிக்குபோய் உபாத்தியாயர் திருவருளினால் என்ன உபதேசித்தருளிய போதினும் கைவிடாது அதனைச் சாதிக்கவேண்டுமென்று தனக்குள் நிர்மாணித்திருக்கையில், ஓர்நாள் உபாத்தியாயர் வழக்கம்போலப் பிள்ளைகளைவாசிக்கச்செய்து, இப்பிள்ளையைப் பார்த்துக்கொண்டே கணேசா! வென்று தன் ஆசனத்தின்மீதுட்கார்ந்தார். அவ்வாக்கியத்தையே அவன் உபதேசமாகக்கொண்டு இரவும், பகலும், நினைவிலும், கனவிலும், வைராக்கிய மனத்தனாய் தியானித்துவர, ஸ்ரீ விநாயகக்கடவுள் மனமிரங்கி சன்னியாசி வேடம்பூண்டு இப்பிள்ளையைத் தன்னருகிலழைத்து பிள்ளாய்! உனக்கு என்னவேண்டுமென்றுவினவ, அப்பிள்ளை நீர்யார்? உமக்கு என்மீதி லிவ்வளவு கிருபையுண்டானதற்குக் காரணம் யாதென, அதற்கு ஸ்ரீவிநாயகப்பெருமான் மாறுத்தரமாக யான் கணநாதன் என்னையே வுன் திருவாக்கினால் திடசாத்திர நிஷ்டாபரேரியாய்ப் பூசிக்க மனம் புளகித நிங்கனமெழுந் தருளினேமென, அப்படிக் கிருக்குமாயின், (அழியாகலைக்கிழங்கு) வேண்டுமென்று சொல்ல, கணநாதன் மிக்க

அன்பு கூர்ந்து (ஔவையை) உபாசித்துக்கொண் டிருந்தால் உனக்கு அருள்செய்வாரென வுரைத்துமறைந்தனர் அதுமுதல் ஔவையை நோக்கி அரியதவம்புரிய, சரஸ்வதியாகிய ஔவையார்இப் பிள்ளைக்குப் பிரசன்னமாகி வேண்டுவதைக் கேளென, தனக்கு (கலைக்கிழங்கு) வேண்டுமென்று சொல்ல அக்கணமே யான்சொல்லும் நூல்முழுவதையுங் கேட்பாயாயின் நீ வினவிய கலைக்கிழங்கு கிடைக்குமென்றுக்கியாபிக்க தாயே! அதனைத் திருவுளம் பற்ற வேண்டுமென் றஞ்சலியஸ்தனாக நிற்தப் பின்வருமாறு உபதேசித் தருளினர்.

சுபமஸ்து.

---

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# உயர்ஞான சர நூல்.

## விநாயகர் துதி.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

மணக்குமலர்க் காவளர்ப்பன் காழிதனிற் சதகிருது
வணங்கி யேத்தப்
பணைக்காத்து குறுமுனிவன் கமண்டலத்தைக் ககவுருவாய்ப்
பரிந்து சாய்ந்தாங்
கணைக்கடங்காப் பிரவாகஞ் செய்தருள்ம தாவளவா
னனத்தான் செம்பொற்
றணைக்கமலம் போற்றிஔவை ஞானசர நூற்காதை
சொல்லு வாமே.

---

## அவையடக்கம்.

வெண்பா.

பித்தன்று ளுய்ந்துணராப் போன காரியத்தை
சத்தமிட்டுக் கூறுந் தன்மையா—லித்தரையில்
கற்றேன்போல் யானுங் கழறுமிதைக் கற்றோர்கள்
குற்றமாய்க் கொள்ளார் குறித்து



### 1-வது சரத்தின் விபரம்.

சரமென்பது-கலை, வாசி, சுவாசம், மூச்சு, பிராணன், ஆத்துமாவென்பதாம். ஆதலால் உன் நாசியில்வரும் சுவாசமாகிய காற்றை நீ முதலாவதறிதல்வேண்டும்.

### 2-வது சரம்பார்க்கும் விபரம்.

உன் நாசியில்வரும் சுவாசம் இருவகைப்படும். அது இடப்புரம் வலபுரமாய் ஓடிக்கொண்டேயிருக்கும். வலதுப்புறம் வரும் சுவாசத்தின் பெயர், சூரியகலையென்றும், இரவிசரமென்றும், ஆதிபுரமென்றும், கதிரவன் திசையென்றும், திவாகரன் பக்கமென்றும், ஆதவன் திசையென்றும், அலரி பாரிசமென்றும், இதனையே ஆண்சரமென்றும் பிங்கலையென்றுஞ் சொல்லத்தகும்.

இனிசந்திரனென்றும் இடதுசரத்தை அதாவது இடதுபுரம் வருஞ் சுவாசத்தின் விபரங் கூறுவாம். இடதுபக்கத்தில்வருஞ் சுவாசத்தின்பெயர் சோமன்கலையென்றும், சந்திரநாசியென்றும், திங்கள் புரமென்றும், மதி திசையென்றும் இஃதனையே பெண்சரமென்றுஞ் சொல்லத்தகும். ஆறுய்ந்துபார்க்கின் இவ்விரண்டிற்குமத்தியில் அதாவது இருபுரமும் நிறைந்தோடுதல் சுழிமுனையென்றும், ஜோதி வுச்சியென்றும், மயிர்ப்பாலமுதுவென்றும், சூனியசரமென்றும் அக்கினி பாரிசமென்றும், நெருப்பாரின்படியென்றுஞ், சூனியகலையென்றும், அலியெனுமாம்.

### 3-வது சரத்தின் அளவை கூறல்.

சூரியகலையென்றும் ரவியானது 5-நாழிகை அளவும், சந்திரனும் 5-நாழிகை நடப்பதன்றி, வேறன்று சூனியமோவெனின் 5-விநாடிநடப்பதறிதாம். சூரியன் நடக்குங்கால்வெளிவிடுகையில்5-மாத்திரை அளவும், உட்புகுங்கால் 6-மாத்திரை அளவுயாம். சூனியமோவெனின், ரேசக, பூரகமெனும் மிவ்விரண்டு சமயங்களிலும் 5-மாத்திரை முறையே நடத்தலுமாம். சந்திரனும், சூரியன்போலாம்,

### 4-வது சரம்பார்ப்போர் அளவும் ஒழுக்கமும் மதிப்பும் ஆசனவிதியுங் கூறல்.

சரம்பார்ப்போ ரியாவராயினும் அவரவர் மரபினுக்குகந்தவண்ணம் சத்குருவைபடைந்து அவ்வாசிரியரைத் தன் தந்தையைப்போலுபசரித்து மனப்பூர்வகமாய்த்தொண்டுசெயல் வேண்டும்.

சரம்பார்ப்போர் இரவில் அதிகநித்திரையை விரும்பாமலும், சனக்கூட்டங்களில் நெருங்காமலும், சரீரபல மிருந்தும், மனநெருக்கமும், தன்மதிர்தையுள்ளவராகவு மிருததல்வேண்டும் இவர்களுக்குஆமோவெனின் சம்சாரபந்தத் தோருக்கு வெள்ளை வஸ்

திரத்துடன் பத்மாதனமும் யோக அப்பியாசிகளுக்கு இரத்தின கம்பளம் வியாக்கிரமாசனம் மான்தோலாசனமும் ஞானமதிப்பாளுன்னும் மஹான்களுக்கு தற்பாசனத்துடன் காரண ஆசனமாகிய சிங்க ஆசனம் கோமுக ஆசனம் கருட ஆசனம் இவைமுதலியவை நலமாம்.

### ௫-வது சிவராஜயோகமாகிய வாசியோக அப்பியாசிகள் சரம் நடத்தவேண்டிய காலமும் அளவுங்கூறல்.

### வாரசரம்.

ஞாயிறு, சனி, செவ்வாய் இம்மூன்றுநாட்களில் சூரியனும், வெள்ளி, திங்கள், புதன் இம்மூன்றுநாட்களில் சந்திரனும் நடத்தலுத்தமம். மேற்சொல்லிய சூரிய சந்திரநாட்களில் எக்காலங்களிற் சரம் நடத்தவேண்டுமென்று வினவில் அதிகாலையில் 25-நாழிகை வரையினும் நடத்தல்வேண்டும். வியாழமோவெனின் வளர்பிறையில்சந்திரனையும், தேய்பிறைகாலங்களில் சூரியனையும் நடத்தல்வேண்டும். ஆயினும் சனிவாரத்தில் 25-நாழிகைமுதல் மறு 30-நாழிகை வரையினுஞ் சூரியகலை நடத்தல் உத்தமத்திலுத்தமம். மேற்சொல்லிய சரம் இனையளவாக நடவாமையாயினும் ஆசான் அனுக்கிரகிப்பராயின் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கி வேண்டியசரம் புற்றிலிருந்து சர்ப்பஞ் சிறுவதுபோல அளவற்ற ஆனந்தத்துடன் வெளிப்படுத லுண்மையாம்.

### 6-வது ஆசானளவு.

ஆசானென்பது பரமாகசியமாகியகடவுளின்காருண்ணியதிருவருளேயாம். அத்திருவருளோ சமயோஜிதமாய் அவதாரமாயென்னுதல்வேண்டும் அதாவது சதா தன் சாதனையை உள்ளும்புறம்பும் மறவாத சிவபத்தியையே பூஷணமாய்க் கொண்டவரும் வைராக்கிய ஜ்யேஷ்டராயும், சாஸ்திர புராணங்களும், மாபுநூல்களையுஞ் செவ்வையா யோர்ந்தவராயும், நல்லொழுக்கம் நன்னடக்கைபளிங்குபோன்ற மனம்வாசியை நேசித்தலாதிய குணங்களையுடைய புண்ணியபுருடனையே ஆசானெனத்தகும்.

### 7-வது சரம் நடவாமைக்கு காரணமும் நடத்தும் வல்லபமுங்கூறல்.

சரியன காலப்பிரமாணமாய் சரம் நடத்தாமையாலும், நடத்த லறியாமையாலும், நடத்தலுண்மையென் றறியாமையாலும், நடத்துங்காலங்களில் கண் விழிக்காமையாலும், ஒழுங்கீனமாய்ப் பாவித்தாலும், தான் நடக்குந் தூர்ச்செய்கைகளினாலும், சதாலீலையில் பிரியப்படுவதாலும், திரேகவலுவில்லாதாலும், உண்ணுமுணவின் பேதங்களாலும், வியாதியினால் மெலிவதாலும், பெரியோரை மதியாததாலும், சதா 'நீமைமேன்மனதிற்





றடிபுகுவதாலும், பொய்பேசலில் அதிக விருப்பங்கொள்வதாலும், முறைமையாய் நடத்தாமையாலும், அவைக்குறிய பத்தியமார்க்கத்தை யனுசரியாமையாலும், சரம் விகற்பப்படும். ஆயினும் மேற்சொல்லிய விஷயங்களுக்கு வித்தியாசப்படும்படி நடப்பதே சரம் நடத்தலும் ஒழுங்காகும்.

### 8-வது சரம் நடத்துபவரின் பத்தியங்கூறல்.

சரம்நடத்து மொவ்வொருவரும் பிரதிதினமும் அதிகாலை 22-நாழிகைக்கு மேற்படாமல் கண்விழித்தல் வேண்டும். 25-நாழிகை வரையில் சரம்நடக்க முயற்சிச்செய்தலோடு தருமதேவதைகளின் பக்தி, குருவின் வாசம், தாய் தந்தைகளாகிய பெரியோரின் அன்புமுதலாகிய விவைகளில் மனஞ்சலியாமையோடும் மேற்சொல்லிய 25-நாழிகைக்குள் சரத்தை வசப்படுத்தல்வேண்டும். மேற்சொல்லிய நாழிகைக்குமேல் 5-நாழிகையளவும் விகற்பம் நேரிடாமல் காத்துக்கொண்டிருத்தலுடன் ஆசனம் விட்டெழுந்து மாசலம்விடுத்து தந்தசுத்தி முடித்துக்கொண்டு ஒருநாழிகையளவு பரம்பொருளாகிய ஸ்ரீ விநாயகக்கடவுளை தியானித்து 5-விராகனிடை கோமேதகம், ஒன்னரை விராகனிடை சீனியை சேர்த்துண்டு அதிகவடை விரும்பாமல் வெளகே வொழுக்குகளை நடத்தல்வேண்டும். அன்றியும், பகல் 15-நாழிகைக்குமேல் இதனது இரண்டாம்பிரிவில் எழுதியிருக்கும் ஆயுர்வேதத்தில் நோயணுகாவிதியிற் கூறியுள்ள பதார்த்தங்களையும், மிக்கவலிமை தரத்தக்கவைகளையும் புசித்தல்வேண்டும். அளவிறன்றி முழுவயிறு புசித்தலாகா கசப்பில்மிகுந்த விருப்பத்தைத் தவிர்த்தல்வேண்டும் இரவில் பால்சேர்ந்த கோதுமைக்கஞ்சியன்றி மற்றவைத்தவிர்த்தல் நலம். சம்சாரபந்தத்தில் ஈடுபட்டவராயினும் மூன்றுமாதங்களுக் கோர்காலன்றி ஸையோகந்தகா. இவ்விதியை அனுசரிக்கும் ஒவ்வொருவரும் ஆரம்பமுதல் 6-மாதவரையினு மேற்சொல்லிய பத்தியங்களுடன் ஸ்ரீஸையோகங்களைத் தவிர்ப்பராயின் சரம் எளிதிலுணரத் தக்கவராவர்.

### 9-வது முழுச்சரம் நடத்தலின் விபரங்கூறல்.

மேற்கூறிய வாரசரமும் பத்தியமும் அளவாய் ஓர் அயனகாலம்செல்வாய் நடந்துவருமாயின் ஆறுஅயனங்கள் வாரசரமாய் நடத்தி அதுமுதல் பகல் முழுவதும் சூரியன் இரவுமுழுவதும் சந்திரன் ஆக இவ்வண்ணம் நடத்தல்வேண்டும். இவ்விதிப்படி மூன்று அயனங்கள்நடத்தி, சரத்தை முடிவுசெய்யுங்கால் சரம் போக்கியோடுகீரும் பாலும்போற்கலந்து, ஒற்றுமையாதலுடன் சரீர அழிவில்லாமல் யோகசாதனங்களுக்கு வேண்டிய காலம் சரீரத்தை சரமே போஷகராயிருந்து நிலைப்பிக்கும். ஆதலின்யோக

அப்பியாசிகளாகியவியாவரும் சரம்நடத்தலே முதல்யோகமாய்க் கொளல் வேண்டும். சரத்தை வயப்படுத்தாமல் பிராணன் போக்கினைவிட்டு நீங்காமலிருக்க வேறுமார்க்கம் அறிவதரிது.

### 10-வது சூரியன் சந்திரன் நடக்கவேண்டிய காலங்களில் நடக்கத்தக்க காரியாதிகளைக் கூறல்.

சூரியகலை நடக்குங்காலையில் யோகஅப்பியாசஞ் செய்யத்தொடங்கல் மந்திரசித்தை, சாதித்தல், ஔடத மருந்துதல், சாஸ்திர வாராய்ச்சி செய்தல், உண்டிசாப்பிடுதல், லாகிரியாதிய பாஷாணங்களைப் புசித்தல், ஔடதமுடித்தல், நீருத்தல், சாவகாசஞ்செய்தல், பேசத்தொடங்கல், நூல்முதலாகிய கவித்துவஞ்செய்தல், ஒருவரைசோதித்தல், ஸ்நான பானங்கள் செய்தல், குதிரையைச்சவாரிசெய்தல், சயனித்தல், பெரியோர்களைத் தரிசனஞ்செய்தல், பூமியில்புதைத்த தனத்தையெடுத்தல் இவை முதலியவைகட்கு நலமாம். சந்திர கலைக்கோவெனில் தன்மதானஞ்செய்தல், ஆபரணம் அணிதல், வாவிமுதலாகிய நீர்சாலைகளெடுத்தல், விவாகமுடித்தல் ஆகிய வினைகள் நலமாம். ஆயினும் சூரியகாலங்களில் உஷ்ண மிகுதியாதலாலும் சிலேத்துமகாலங்களிற் சுழிமுனையா இருத்தலாலும், ஏறுமாறாகவுண்டியும் மற்றசெயல்களும் நடத்தல் நலமாம். சூனியகலைக் காலத்தி லெக்காரியமுந்தவிர்ப்பது நலம். ஆனால் யோகசாதனைக்கோவெனின் மனம்நிலைக்க சமாதியோகஞ்செய்தலே நலம்.

### 11-வது சரத்தை வசப்படுத்தும் விபரங்கூறல்.

(அதிகாலையில் 25-நாழிகைக்குமேல் நடத்துஞ்சரமும், மேற்சொல்லியபிரகாரம் காரியாதிகளை நடத்துஞ் சமயங்களிலுள்ள சரமும், ஏறுமாறாகவிருப்பினும் அதை சரிப்படுத்தும் விபரங்கூறுகின்றது.) எவ்வாறெனின் சரம் திரும்பவேண்டிய காலங்களிற் சூரியன்நடக்க சந்திரன் வேண்டுமாயின் சூரியனைப்பெண்ணாகவும், சந்திரனை ஆணாகவும், சந்திரன் நடக்க சூரியன்வேண்டுமாயின் சந்திரனைப்பெண்ணாகவும், சூரியனை ஆணாகவும்பாவித்து, கீழ்மேலாகச்செய்விக்க சூரியன் வேண்டியகாலங்களிற் சூரியனும் சந்திரன் வேண்டியகாலங்களிற் சந்திரனும் நடத்தலாகும். மேற்சொல்லிய விதிப்பிரகாரம் நடவாமையாயின் கீழ்ச்சரம் வலுவாயிருத்தலால் பிரளவில்லையென்று மேற்புர நடகருவியைக் கீழ்ப்புரமாய்ச் சொருகச்செய்து பக்கவிலாவின் கீழ்நாலரை அங்குலப்பிரமாணம் கம்பளமாயினும் பட்டாகினும் சுத்தவஸ்திரமேனும் பூமட்ட முயர்த்தல்வேண்டும். அப்படியு மேற்சொல்லிய விபரங்கட்கு சரிவராதிருப்பின் யோகசாதனையுள்ளோர் மூலாதார அப்பியாசமாகிய கீழாதாரத்தை சுத்தப்படுத்தல் வேண்டும். மேற்படி அப்பியாசமில்லையாயின் ஆசான் திருவருளைத்தியானித்து தகுந்த சிகிச்சைசெய்து கொள்ளல்வேண்டும். இவ்வருமையான காரியத்தைச்செய்தல் புண்ணியபுருடர்களுக்கன்றி மற்றவர்களுக்குவாய்ப்





பதரிதாம். அப்படி ஓர்கால்வாய்க்கினும் நடத்தலரிதெனவே சொல்லத்தகும். ஆதலின் மகா கவனத்துடனும், சிரத்தையுடனும், நடத்தப்படவேண்டும். சூனியசரம் வேண்டுமாயின் நிரேகம் சமமாய் பத்மாசனத்திலிருக்கச்செய்து சூரியனதிகப்படுங்காலத்திற் சூரியன் பக்கமாகவும், சந்திரனதிகரிக்கில் சந்திரன்பக்கமாகவும், உயிரெழுத்தாகிய மவுனஅக்ஷரத்தை பதமாயமைத்து சிறுகச்சிறுக மிதிப்பித்து, சூரிய சந்திரர்களை நேசிக்கச்செய்து, சூனியசரமாக்கி யோகாப்பியாசஞ் செய்பவரே கலியுகயோக புருடராகவும் வேண்டும்போது சித்து விளையாடுபவராகவும் சொல்லத்தகும். சூனியசரம் சம்பாதித்த லெளிதாகவிருப்பினும் சுழிமுனையைக்காக்கும் (வேஸ்த்து) வாயுவை அசையாமல் செய்வித்தலே மிகவரிதாம். ஆதலின் இவ்விதிகளை மஹா ஜாக்ரதையாய் அறிதலும் நடத்தலும் வேண்டும்.

### 12-வது சிவராஜயோகமாகிய வாசியோகத்தின் விபரமும், அதற்குரிய சாத்தியவியல்பும் கூறல்.

சரம் நடத்துங்கால் யோகவப்பியாசமும் வேண்டுமாயின் பராபர வஸ்துவென்னும் மூலாதாரப்பொருளாகிய ஸ்ரீவிநாயகக்கடவுளை பேரின்ப வாழ்க்கையிலமைத்தல்வேண்டும். நமக்குள் மறைவிடமான விடங்களில் மாயா சொரூபமாயும் சுழிமுனையிலேசிக்கும் ஞானக்கொழுந்தாயுமுள்ள அறிவைத்தேடல்வேண்டும் வினையாகிய இருளையகற்றல்வேண்டும் பிராணனை உண்மையால் துன்னிதம்போற் றவக்கல்வேண்டும். சுழிமுனையிச் சுடரையேத்தி வோர்மனதாய் நிற்றல்வேண்டும். சுவாசமாகிய வாசியைப் பிராணனால் நேசித்தல்வேண்டும் பிராணனும் ஜடலம் ஏகோபித்து நீரும் பாலுபோற்கலந்து பூரித்தலே (சிவராஜயோகமாம்.) இத்தனை அனுஷ்டிப்பவரே பரமயோகிகளாவர். ஆதலின் இதனையுமனுட்டிக்கவேண்டும். இதையனுஷ்டிக்குங்கால் உண்ணும்போதும் உறங்கும்போதும் உயிரெழுத்தாகிய மௌனஅக்ஷரத்தை எழுமாத்திரையிருத்தி உட்படுத்திவைத்து சரத்தைச் சுழிமுனை அதாவது சூனியதலையில் வைத்திருந்து ஆசனபங்கமில்லாமலப்பியாசிக்கவேண்டும். அக்காலங்களில் சூரியன் மேற்கூறிய பிரமாணம் வயப்படாதாயினும், சூடு கபாலமாகிய உச்சியில் பற்றினும், அடிசிறுத்து நடக்கினும் அச்சாதகத்தை நிறுத்தி ரஞ்சிதகோபானஞ் செய்தல் நலம்.

### 13-வது சந்திரகலையிலிருந்து அமுதம்புசிக்குமார்க்கமும் அதனியல்புங் கூறல்.

நவத்துவாரங்களிற் பெரியதும் உறுதியுமாய் மேலிலிருக்கும் அசைக்கருவியென்னும் இரண்டாமெழுத்தாகிய நகாரத்தை இரண்டரை அங்குலப்பிரமாணம் உள்வாங்கி மேற்சொல்லிய அப்பியாசங்களை இடைவிடாமல் இருபத்துநான்கு அயனங்கள் நடத்துங்கால் இடபவாகனராகிய சதாசிவக்கடவுளின் திருவருளாகியவமுதம் சிரசிற்சிந்துமென்றறிவாய் அதன்பெருமையோ சொல்லத்திறமன்று ஆயினுமிதனைச் சாதனை செய்தல்வேண்டும்.

## 14-வது மேற்கூறிய வாசரங்கள் தப்பிநடக்கினும் எதுமாறுப் பிசகிநடப்பினு மதின்பலன் கூறல்.

முதனாளாகிய ஞாயிற்றுக்கிழமையிற் சூரியன் நடவாமல் 5-நாழிகையளாவும் சந்திரன் நடக்குமாயின் படை, குட்டம், சொறி, சிரங்கு முதலாகிய தேகத்தின் மேற்புறமான வியாதிகளும் சலி, இருமல், இரைப்பு முதலாகிய உள்வியாதிகளும் அடரும் செவ்வாய்க்கிழமையிற் சந்திரன் நடக்குமாயின் மனக்கலக்கம்,, சினேகத்துவேஷம், சுரம், உட்சுரம் இவைகளடரும். சனியிற்சந்திரன் நடக்குமாயின் பிராணனுக்கு அபாயமான தந்துகளும் சீதளம் சன்னிமுதலாகிய வியாதிகளுமடரும். சந்திரனடக்கவேண்டிய வளர்பிறை வியாழத்தில் சூரியன் நடக்குமாயின் பொருட்சேதமும், வியாதிக்கு மருந்து பிடிக்காமையுமாம். சந்திரனடக்கவேண்டிய வாரங்களாகிய திங்கட்கிழமையில் சூரியன் நடக்குமாயின் ஆயுள்குறைவும் ஜலதோஷமும் அடரும் புதன்கிழமையில் சூரியனடக்குமாயின் அபாயங்களும் தொடுத்தவிஷயங்கள் பலியாமையும் பாரம் நீரேற்றல் தலைக்குத்தல் உண்டாகும். வெள்ளிக்கிழமையில் சூரியனடக்குமாயின், தன்மக்களுக்குதோஷமும் சுற்றத்தார் கலக்கமும் கண்ணோய் காதுநோய்களுமுண்டாகும். தேய்பிறைகாலமாகிய வியாழத்தில் சந்திரன் நடக்குமாயின் மஹாரோகங்களும் சாதனைக்குறைவும் தாபசுரம் தலைநோக்காடு மடரும்.

## 15-வது பாழாய்நடத்தலின் குணங்கூறல்.

இருகலைகளுந் தவறிதவறியோமொயின்ஜலதோஷமேயன்றிவேறன்று ஒருபுறமாய்ச் சாதகஞ்செய்யுங் காலமாகிய அயனசரம் முடிவிலன்றி இதற்கு முன்பாகவே ஓர்நாள் முழுவதும் ஒருபக்கமாய் சரம் நடக்குமாயின் மூன்றுமாதங்களில் மரணமெனினும் மூன்று வருஷங்களில் மரணமாவார் ஒருபுறமாகவே ஆறுநாள் நடக்குமாயின் ஆறுதிங்களில் மரணமாதல் நிச்சயம் ஆதலின் சரம் சரிவரநடத்தல் மிகவும் அருமையென் றுணர்தல் வேண்டும்.

## 16-வது மேற்சொல்லிய சரவிகற்பங்களுக்கும் சாதனைகளுக்கும் வேண்டிய பத்தியங்களும் கற்பங்களுங் கூறல்.

மாந்தளிர் மேனியையுடைய பெண்ணாய் 14-ம் படியிலுரைத்த வாரசரபேதங்களுக்கு சிகிச்சையும் பக்குவமும் அறிவாயாக. அதாவது மேற்சொல்லிய வியாதிகளுக்கு ஆயுர்வேத அளவாய் நடத்தலதியவசியம். பாழாய்நடக்குஞ் சரத்திற்கோவெனில் முன் 12-ம் படியிலுரைத்த வாசியோகமே இதற்கேற்ற சிகிச்சையாம். இச்சரங்களை நடத்தியும் வாசியை வயப்படுத்தும்வகையறிந்தும் காலபேதப்படி சிகிச்சைகளைச் செய்வதுடன் மனவுறுதிக்கும் திடச்சித்த முண்டாதலுக்கும் தேகசித்தி மனசித்தியாதலுக்கும் கற்பமுறைக்க கேட்பாயாக. அவையென்னெனின் மிளகோரயனகாலமும் சூரணம் இரண்டுபக்ஷங்களும், கேசரிமெழுகு ஆறுபக்ஷங்களும் வெள்ளைக்கல்பமாகிய கணக்கல் சுண்ணம் பத்துபக்ஷங்களு முட்கொள்வதே கற்பமாம்.





## 17-வது கல்பங்களின் விபரங் கூறல்.

மேற்சொல்லிய படியில் கல்பவதிக்குத் தெளிவு கூறாமையால் இனித் தெளிவாயாக, அதாவது மிளகென்பது மிளகும் பச்சிலையாம்—இவை முடிவுபெறச்செய்து சூரணங்கொள்ளல். சூரணமென்பது கீலிபச்சிலை, வல்லாரை, வெள்ளைக்கிரக்கிட்டான். பிரமி பொற்றலை, பொடுதலை இவைகளைச் சூரணமாக்கல், கேசரிமெழுகென்பது கேசரிதைல மூலியமாய் லிங்கக்கட்டுடன் சில மூலிகைகள் அமைத்து பாகஞ்செய்துக்கொள்ளல். வெள்ளைக்கல்பமாகிய கணக்கல் சுண்ணமென்பது நூலந்தியம் அதாவது முடிவுபெறப் பார்க்குதல் என்பதாம். இவைகளை நன்குணர்தல் வேண்டும்.

## 18-வது கல்பஞ்செய் பாகமும் உண்ணும் அளவையுங் கூறல்.

இரண்டரை வீசை மிளகை பதினாலும்படியிற் செப்பிய அளவின்படி பகிர்ந்து, பிரதிதினமும், பொற்றலையான் தகரைசமபாகமாய்ச் சேர்த்துண்ணல் வேண்டும் சூரணமோவெனில், பதினேழாம்படியிற் சொல்லிய பச்சிலைகளைத் தனித்தனி உலர்த்தி ஆறுபலம் சூரணமாக்கி வைத்துக்கொண்டு 16-ம் படியிற் கூறிய அளவிற்குப்பகிர்ந்து சொர்ணப்பால் சமபாகமாய்ச் சேர்த்து சாப்பிடல்வேண்டும். கேசரிமெழுகோவெனில், கேசரியை முறைப்படி உலர்த்தி தைலமிறக்கி 12-புட்டி தைலத்தால் மூன்று வீராகனிடை லிங்கக்கட்டிக்கு சுருக்குகொடுத்து தைலம் முடிந்தவுடன் லிங்ககட்டை பொடித்து வாசிக்குதவும் பச்சிலைகளைச் சார்பிழிந்து இரண்டு படி சாற்றில் 5-பலம் சீனி அறுகன்வேர் திபாழம் ஆழாக்குவிட்டுகலக்கி மூன்றுநாட்சென்றெடுத்து அடி சாற்றில் கலக்கி பசுநெய் 5-பலம் விட்டு லேகியபதமாக்கியிண்டி இறக்கி அடிலிங்கக்கட்டை சன்னிக்கல் கல்வத்திற் பொடியாக்கி சமபாகங்களாய்போட்டுகஞ்செய்து லேகியத்தையும்பாதித்து உண்டைகளாக வமைத்து இரண்டையுஞ்சேர்த்து உண்ணல்வேண்டும்.

## 19-வது கற்பமுண்ணுங் காலமும் பத்தியமுங் கூறல்.

கல்பமும் அதற்கேற்றகாலமும் பத்தியபாகமும் செவ்வனே அறிந்து நடத்துத லெளிதாக இராவிடினும் மேற்சொல்லிய பிரகாரம் பாகப்படுத்தி சாதனைக்காலங்களில் சூட்சுமசரம்பார்த்து அருந்துதல் மிக அருமையாகவும் பெருமையாகவுமிருக்கும்.

## 20-வது பஞ்சபூதியத்தின் விபரங் கூறல்.

பிரிதி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பவைகளே பஞ்சபூதங்களென்று சொல்லப்படும். இவையுள், பிரிதிவியென்பது நிலம் அல்லது மண், அப்பு வென்பது நீர் அல்லது ஜலம். தேயு வென்பது அக்னி அல்லது தீ, வாயு வென்பது காற்று அல்லது வளி ஆகாய மென்பது, விசும்பு அல்லது சப்தமாகிய வியோமம். இவைகள் அண்டத்துக் கேற்றதாயினும் பிண்டத்திலுமுண்டெனக் கொள்ளல் வேண்டும்.

## 21-வது மானிடவுருவ பஞ்சபூதியங் கூறல்.

பிரிதிவ் என்பது தேகம், அப்பு வாயிலுண்டாகுமாகையால் ஜலத்துக்கேற்ற விடமெனக்கொள்க, தேயு ஒளியையுடைய கண்ணெனக்கொள்க, வாயுவென்பது காற்றுண்டாகும் நாசியெனக்கொள்க. ஆகாயமென்பது சப்தமுண்டாகு மிடத்தை யுணர்த்துங்காதெனக் கொள்க.

## 22-வது சரத்தின் பஞ்சபூதியங்களைக் கூறல்.

மேற்சொல்லிய பஞ்ச பூதியங்களைச் சரத்தில் பார்க்குஞ் சமையங்களில் சந்திரன் நடக்கினுஞ் சூரியன் நடக்கினும் மூக்குத்தண்டிற் சார்ந்து வரும் சுவாசம், பிரிதிவு என்றும், கீழ்நோக்கி நடக்கில் அப்பு வென்றும், மேல்நோக்கி நடக்கில், தேயு வென்றும், மூக்குத்தண்டின் எதிர்பக்கமாய் வருஞ் சுவாசம் வாயு வென்றும், நாற்பக்கங்களிலும்படாது பெருகவோடுவது ஆகாய மென்றும் முறையேகொள்க.

## 23-வது பஞ்சபூதியங்கள் நடக்கும் அளவும் காலமுங் கூறல்.

பிரிதிவு 12-அங்குலமும், அப்பு 16-அங்குலமும், தேயு 8-அங்குலமும், வாயு 18-ம், ஆகாயம் 6-அங்குலமும் நடக்கும். இவைநட்கு காலமோவெனின் பிரிதிவு 1-நாழிகையும், அப்பு ஒன்னரை நாழிகையும், தேயு 1-நாழிகையும், வாயு ஒன்னரை நாழிகையும், ஆகாயம் 1-நாழிகையும் ஆகிய அளவாய் நடக்கும். இவைகளின் நன்மை தீமை அறியவேண்டின் பிரிதிவு அப்பு நன்மை யெனவும், தேயு மத்திப மெனவும், வாயு ஆகாயம் தகாதவைக ளெனவுஞ் சொல்லத்தகும். யோக அப்பியாசத்திற்கு தேயுவே தக்கதெனக்கொள்க.

## 24-வது பஞ்சபூதியம் முறையே ஒவ்வொன்றுங் குறைவதைக் கூறல்.

பிரிதிவுக்கு அப்பும், அப்புவுக்கு தேயும், தேயுவுக்கு வாயும், வாயுவுக்கு ஆகாயமும் குறைந்தது. எவ்விதமெனின், பிரிதிவுக்கு, ஸ்பரிசம், ரூபம், ரசம் கந்தம், சப்தமுமன்றி அப்பு கந்தங் குறைந்தால் பிரிதிவுக்கு அப்புகுறைந்த தென்றும், தேயுவுக்கு கந்தமும் ரசமுங் குறைந்தால், அப்புவுக்கு தேயுகுறைந்த தென்றும், வாயுவுக்கு, கந்தம், ரசம், ரூபம் குறைந்தால் தேயுவுக்கு வாயு குறைந்ததென்றும், ஆகாயத்திற்கு ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் குறைந்தால் வாயுவுக்கு ஆகாயம் குறைந்ததென்றும் முறையே கொள்ளல் வேண்டும்.

## 25-வது சூக்குமசரத்தின் விபரங் கூறல்.

சூட்சமசரமென்பது நிறத்தினாலறுவதாம். இதனை அறிவதருமையாதலின் சூக்குமசரமென சொல்லலாயிற்று பிரிதிவு பொன்னிறமாகவும், அப்பு வெண்மை நிறமாகவும், தேயு செம்மை நிறமாகவும், வாயு கருமை நிறமாகவும், ஆகாயம் நீல நிறமாகவுங் கொள்ளல்வேண்டும்.





## 26-வது சரம் நடத்துவோர் கவனிக்கவேண்டிய முக்கிய விதிகளைக் கூறல்.

முன் 8-ம் படியிலுரைத்தவிதம் நடத்தலுடன் சோம்பல் உறக்கி கொட்டாவிவிடுதல், கோபம் அதிகரிக்கும்படி செய்துகொள்ளல், சந்தோஷத்தைப் பெருகச்செய்தல் இவைமுதலியவைகள் தகாவாம்.

## 27-வது ஆயுள்குறையுஞ் செய்கைகளைக் கூறல்.

அதிக விரைவாயோடுதல், அதிக நித்திரைசெய்தல், மிக பெருமூச்சுவிடுதலு மாகா, ஏனெனின் சாதனைக்காலங்கள் தவிர மேற்சொல்லிய காலங்களிற்சுவாசம் அதிகரித்து ஒருநாளுக்கு நடக்கவேண்டிய 21600-க்கு அதிகப்படுதலால் ஆயுள்குறைதலெனவும், மேற்சொல்லிய 21600-க்கு குறையும்படி செய்வித்தல் ஆயுள்விர்த்தியாகுதலெனவுஞ் சொல்லப்படும்.

## 28-வது மேற்சொல்லிய பஞ்சபூதியங்களைத் திருப்பி செப்படுத்தும் மார்க்கங் கூறல்.

11-வது படியிலுரைத்த வண்ணம், சூரியகலை, சந்திரகலை, சுழிமுனைகளை மாற்றுவதுபோலவே இவைகளையு மாற்றுதல்வேண்டும். எப்படியெனின், நிரேசகத்தைக் கவிழ்த்து உந்தியில் மேடிருக்கச்செய்து, ரேசக பூரகங்களை மிதமாய் நடத்திக்கொண்டுவர, திரும்பிக்கொண்டேவரும். வேண்டிய பூதியம் திருத்துங்கால் அச்சாதகத்தையும் நிறுத்திவிடல் வேண்டும்.

## 29-வது சூரியசந்திர சுழிமுனைகளுக்கும் நாடிகளுக்கும் ஒற்றுமையாதலைக் கூறல்.

திங்களென்னுஞ் சந்திரன் வாதநாடியெனவும், ரவியென்னுஞ் சூரியன் பித்தநாடியெனவும், சுழிமுனையை சிலேத்தும நாடியெனவும், சொல்லப்படும் அதாவது வாதபித்த சிலேத்துமங்கள் 5-ம் படியிற் கூறியவிதம் வாரசரம் அளவாம் நடத்தலாலதனைச் செவ்வையாயறிதல் வேண்டும்.

## 30-வது ரேசக பூரகத்தின் விபரங் கூறல்.

ரேசகமென்பது உட்புகும் சுவாசம், அதனை உற்சுவாசமெனவும், பூரகமென்பது வெளிவிடும் சுவாசம், அதனை நிசுவாசமெனவும், ரேசகத்தைச் சிவமென்வும், பூரகத்தைச் சத்தியெனவும், உட்புகும் சுவாசம் பிராணவாயுவெனவும், வெளிவிடும் சுவாசம் கரியமலவாயுவெனவும், உட்புகும்சுவாசம் அமுதமெனவும், வெளிவிடும் சுவாசம்விஷமெனவும், இவைகளையே நன்மை தீமைக்கு ஒழுங்கெனவே சொல்லத்தகும்.

சுபமஸ்து.

ஔவையார் உயர்ஞானசர நூல்

முற்றிற்று.

---



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தினக்கிரமாலங்காரச் சுருக்கம்.

## முகவுரை.

சர்வஜீவ தயாபர கடாக்ஷவீக்ஷண்யத் திருவருட்பொழியும் வள்ள
லாகிய சிவபிரானின் கருணைபெற்றிலகும் அன்பர்காள்! இவ்வுலகின்கண்
வாழும் ஆன்மகோடிகளெல்லாம் பிராரத்துவ கன்மசம்பந்தத்தாலுண்டா
கும் வியாதிகளால் கட்டுபட்டவர்களாகவே இருக்கின்றனரென்பது அனு
பவகாட்சியன்றோ? ஆதலான் அநாதிமுத்தனாகிய பதியின் காருண்யத்
தினாலாணவமலத்தினின்றும் வெளிவந்த அநுதிபெத்தர்களாகிய ஆன்
மாக்கள் மாயையினிடத்துப்பெற்ற தனு, கரண, புவன, போகங்களில்
முக்கியமாய்த் தனுவாகிய தேகமானது தர்மார்த்தகாமமோக்ஷமெனுஞ்
சதுர்வித புருடார்த்தங்களாலுண்டாகிய பேரின்பத்தை அடைவதற்குப்
பெரிய சாதகமானதா இருந்தபோதிலும், இத்தகைய தேகத்திற்கு கன்
மானுசாரமாகவரும் வியாதிகள் 4448 - நாலாயிரத்து நானூற்று நாற்பத்
தெட்டையும் நீக்கவல்லபண்டிதராகவிடினும் சித்தபுருடர்களாகிய ஜீவன்
முத்தர்களின் கிருபாநோக்கத்தினால் நமக்கு முக்கியமா ஏற்படுத்தியிருக்
கும் நிபந்தனைகளை யாவருமுணர்ந்து நோயின்றி சுகஜீவிகளாக விளங்கற்
பாலதாகவும், இதன் முதற்பாகத்தி லெழுதியிருக்கும் நூலை அனுபவிப்
பவர்கட்கு மிக்க அநுகூலமாக இருக்குமென இரண்டாம்பிரிவில் "தினக்
கிரமாலங்காரச் சுருக்க"மென நாமகரணமளித்து இங்ஙன மெழுதலா
னேன். சாதுக்கள் இதினுண்மையை அலட்சியஞ்செய்யாது நன்குணர்
வார்களென நம்புகின்றனன்.

இப்படிக்கு:

எழுமூர் நேட்டிவ் டாக்டர், வீ. இராமலிங்கதேவர்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தினக்கிரமாலங்காரச் சுருக்கம்.

கணேசர் வணக்கம்-நேரிசை வெண்பா.

சிருலகோர் கட்கினிதாந் தினக்கிரமா லங்காரப்
பேருலவு நற்சுருக்கம் பேசவே — சேருலவு
முத்தருடன் பத்தர்களு நித்தநுதி வத்திமுக
தத்யவைங்க ரன்குபேணை.









## அவையடக்கம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

உற்றசிறு சங்கினு லுத்திநீர் வற்றவைக்கு
மூவமை போலும்
விற்பனர்கள் தம்முனங் கல்லாதான் பேசுகின்ற
விதத்தைப் போலும்
பொற்புயரும் ஞானசர நூற்குதவி யாய்ச்சொன்ன
புல்வன் வாக்கை
கற்றவருங் கற்றவரும் பிழைநீத்து கருணைசெய
காடினேனே.

### 1-வது நோயணுகாவிதி.

உலகினிடத்து திருவருட்செயலால் அரியபிறவியாகிய மானிடதேக
த்தை எடுத்திராநின்ற மக்களனுசரிக்கின்ற பலவித நிலையினுங்கடத்தைக்
காத்துக்கொள்ளவேண்டுவ தநி யவசியமாதலால் அதற்கு முக்கியமான
காரியார்த்தங்களை இங்ஙனங் கூறவந்தமையால் முதலாவது நோயணுகா
விதியென்பதை வெளிப்படுத்துகின்றது. அவையென்னெனின், மலசலத்
தை படக்காமலும், வித்துவை அதிகமாக கஷ்டப்படுத்தாமலும், உண்ணு
மிடத்து நீரைக்காய்ச்சி மோரைவிளாவி, நெய்யையுருக்கி, உண்ணுதலு
மாகிய தன்மையுள்ளவர்களின் நாமத்தை யுச்சரிப்பவர்கட்கும் பிணிவில
கும். அன்றியும் பதார்த்தங்களின்குணங்களையும் அவைகளைப்புசிக்கவேண்
டிய காலபேதங்களையும் பகுத்தறிந்துபுசித்து அதனால் கிடைக்கிறசுகத்தை
அனுபவிப்பவர்கள் பலவாகச்சொல்லப்பட்ட வியாதிகளைக் காணுதவர்க
ளாய்ப் புத்திரர்களையும், மலையைப்போல் உறுதியுள்ளசரீரத்தையும், இவ்
வுலகத்தைச் சிருஷ்டிக்கும் பிரமதேவனைப்போல மிகுந்தஆயுளையும்பெற்று
பதினுலகத்தி விருப்பவர்களுங்கண்டு களிக்கத்தக்கதாக வாழ்வார்கள்
இவ்வாரே.(தெய்வப்புலமை திருவள்ளுவ நாயனாரும்) மருந்து என்னும்
அதிகாரத்திற் கட்டளையிட்டனர். அவையென்னெனின் ஒருவன் முன்
னுண்டது அற்றபடியை யறிந்து பின்மிகப்பசித்து உண்ணுமிடத்து மாறு
கொள்ளாத உணவுகளைக் குறித்தொண்டு உண்ணக்கடவன். மாறுகொள்
ளாமையாவது, உண்பவன் சரீரசுபாவத்தோடு மாறுகொள்ளாமையும்,
காலவியல்போடு மாறுகொள்ளாமையும், சுவைவீரியங்களாற்றம்முள்மாறு
கொள்ளாமையுமாம். மாறுபாடில்லாத உணவுகளேயாகிலும் மனம்வேண்
டியமட்டி லுண்ணாமல் பிணிவாரா அளவின லுண்ணல்வேண்டும். இவ்வா
றுண்பவன் உயிர் பிணிகளாற்றுன்பமுறாமல் சுகமுறும் ஒவ்வொருவரும்
அதி உஷ்ணகாலத்தில் விழித்துச் சுத்தோதகமெனும் நிராகாரம் அல்லது
நல்லஜலம் பிரமாணமாகப் பருகிப் பாதசாரியாய்நடந்து மிதவசனம் வச
னித்து மாலைவெயிலைவிரும்பி பசும்பாலைஇச்சித்து எண்ணெய் நானுதினத்
துக்கொருதாம் அப்பியங்கனஞ் செய்யும்போது வெந்நீரிற்குளித்து பகற்
காலத்திற் ஸ்திரீசையோகம்நித்திரை இவைசெய்யாமல் தன்வயதுக்குமேற்பட்ட
மாதரையும் இளவெயிலையும் இச்சியாமல் மலசலங்களை அடக்காமல் சுக்
கிலத்தை அடுத்தடுத்து விடாமல இடதுகைக் மேற்பாகப்படுத்து மூலரோகத்
தையுண்டாக்கும் பதார்த்தங்களை யுண்ணாமல் புளித்த நீர்போலிருக்குந்
தயிரைப்பருகி முக்காலிற் சமைத்தகறி அமிர்தத்துக்கொப்பாகினும் புசி
யாமல் பசித்தபோதே சாப்பிடுதல் அவையாவது தினமிரண்டோ முட்

கொள்ளல் மாதரை மாதத்திற் கோர்தரஞ்சேர்ந்து மிருந்த தாகமுண்டாயினும் போஜனமுடிவிலன்றிப் பின்பு ஜலபானஞ்செய்யாமல், கருணைக்கிழங்குதவிர மற்றகிழங்குகளை தின்னாமல் வாழை இளம்பிஞ்சைப்புசித்து இரவிற்சாப்பிட்ட பின்பு குறுநடையாகநடந்து ஆறுமாதத்திற் கொருதரம் வாந்தியாகும்படியாயும் நான்குமாதத்திற்கொருதரம் பேதியாகும்படியாயும் மருந்துண்டு ஒன்றரைமாதத்திற் கொருதரம் நசியஞ்செய்து மாதத்திற்குக் குறைந்தது இரண்டுவிசை சவரஞ்செய்து மூன்றுநாட்கொருதரங்கண்களுக்கு மைபிட்டு கஸ்தூரிமுதலிய வாசனைத்திரவியங்களையும், புட்பங்களையுந்தரித்து ராத்திரியில் முகாமல் நாஸ்திரீ நடக்கும்போது பறக்குந்தூசியும் ஆடு, கழுதை, துடப்பம் இவைகளாலுண்டாகுந்தூசியும், மேலேபடும்படிநெருங்காமல் இரவில் தீபதினிழல் மனிதர்நிழல் விருட்சநிழல் இவைகளிற்றங்காமல் போஜனம் ஜீரணிகரும்காலத்திற் புணர்ச்சிசெய்யாமல் நித்திரை போசனம் மலசலம் புணர்ச்சி அழுக்குவஸ்திரம் சீப்பிட்டு சீவும்போது சிக்குநின்றரோமம் ஆகிய இவைகளை மாலைக்காலத்தில் நீக்கி, கன்றோடு கூடிய பசுவையும், தெய்வத்தையும், பிதுர்தேவதைகளையும், ஆசிரியரையும் அம்மாலைக்காலத்தில் பூசித்து நகச்சலமும் கேசச்சலமும்தெறிக்குமிடத்தினெருங்காமல் நடந்துவந்தால் நோயை முன்னிட்டுவரும் எமனுக்கு இவனிடத்திற்வேலையில்லையென்றுநோயனாகாவிதியிற்சொல்லியபடியாலிவ்வொருவரும்இதனை அவசியமாய்அநுபவிப்பதற்குக்கொண்டுவரவேண்டும்.

### 2-வது சரீரம் நிலைபெறுவதற்குக் காரணம்.

சரீரமாகியதேகம் தங்கியிருப்பதற்குக் காரணமாகிய வாதம், பித்தம், சிலேஷ்மம், இரசதாது, மாமிசதாது, மேதோதாது, அஸ்திதாது, மச்சைதாது, சுக்கிலதாது, மலம், மூத்திரமென்னும் சரீராதி 12-களின் வருத்திசீணங்களினால் பிறக்காநின்ற நோய்கள்முழுமையும் நீக்குதற்கு முக்கியமாய்வேண்டிய மருந்துக்களோடுமேற்கண்டஜாடராக்கினியின் குணோதயத்தால் உணவுகளினின்றும் பிரிகின்ற அன்னரசத்தால் போஷிக்கப்பட்டு புஷ்டியாக்கிப் பூரிக்கப்பண்ணி பலத்தையுங் காந்தியையும் நிரந்தரமாகக் கொடுத்துக்கொண்டு உயிராகிய அரசனை வாழச்செய்தும், கருப்பவுற்பத்திக்கு காரணமாயும் தேகத்திற்காதாரவுமாகிய சப்ததாதுக்களில் புருடர்கட்கு சுக்கிலமென்றும், மாதர்கட்குச் சோணிதமென்றுஞ் சொல்லப்படும். இவ்விரண்டும் முறையே சிவம் சத்தியென்றும் பெயர்பெற்றுக்கருப்பவுற்பத்திக்கும், ஆயுள்விருத்திக்கும் முக்கியகாரணமாக விருக்கின்றன. இவை அகாலபோசனம், உஷ்ணபதார்த்த பக்ஷணம், பயம், துக்கம், வியாகூலம், சிந்தித்தல், மிக சந்தோஷம், அதிகோபம், மாரணஓமம், கருமலோபம், அதிசூலரோகம், அதிசாரரோகம், சிரஸ்த்தாது, விஷபேதங்களால் வருகின்ற பற்பலரோகம் காலத்திலும் அகாலத்திலும் காமநூல் விதிப்படி அநேகபந்தங்களுடன் செய்கின்ற சையோகம் அதாவது போகம்நீடித்து நிலைக்கவேண்டியதாய் லாகிரிசேர்ந்த ஔடாதிகளை சாப்பிட்டுச் செய்கின்ற சையோகம்.

மர்மஸ்தானக்கெடுதியென்னு மிவைகளினாலும் விர்த்தாப்பியத்தினாலும் நஷ்டப்படும். இவ்வித நஷ்டமுற்ற சுக்கில சுரோணிதத்தை யுடையவர்கள் பலவித அசாத்தியரோகங்களை அநுபவிப்பதுமன்றி சம்போகத்திற்கு இளைத்துக் குருவியைப்போல் புணர்ந்தும் வாயினாற்பேசி இச்சைதீர்ந்தும் சந்தானவிருத்தியில்லாமல் அற்ப ஆயுளையுடையவர்களாவார்கள்





ஒருவேளை சந்தான விருத்தியிருந்தாலும் அதற்கு அற்பபலனும் ரோகவிருத்தியும் ஆயுள்குறைவும் உண்டாயிருக்கும். ஆகையால் பால்முதலிய மதுர வஸ்துக்களைக்கொண்டு சுக்கிலத்தையும் எண்ணெய் முதலிய பித்த வஸ்துக்களைக்கொண்டு சுரோணிதத்தையும் போஷிக்கவேண்டும்.

### 3-வது விழித்தவுடன் சுத்தசலம் அருந்தலின் குணம்.

நித்திரைசெய்து விழித்தவுடன் சுத்தோதகமென்னும் நீராகாரம் அல்லது கல்லசலம் இதுகளிலேதேனுமொன்றைப் பிரமாணமாகப் பருகில் பயித்தியதோஷம்விலகும் அன்றியும் மலசலபந்தங்களும் நீங்கும் வாதமுதலிய மூன்றுதோஷங்களுந் தந்தம் நிலைகளிற் சஞ்சரிக்கும்.

### 4-வது விழித்தவுடன் பார்க்கத்தக்க வஸ்துக்கள்.

நித்திரைசெய்து விழித்தவுடன் தாமரைப்பூ தங்கம் தீபம் கண்ணாடி சூரியன் புகையொழிந்த நெருப்பு செஞ்சந்தனம் கடல் வயல் சிவலிங்கம் முகில் சூழ்ந்தமலை கன்றையுடையப்பசு தனதுவலக்கை மனைவி மிருதங்கம் இவற்றுள்ளேதேனும் ஒன்றைப்பார்க்கில் உத்தமம்.

### 5-வது விழித்தவுடன் பார்க்கத்தகா வஸ்துக்கள்.

நித்திரை செய்தெழுந்தவுடன் அங்கவீனம் வஸ்திரயீனம் பாவம் காவிவஸ்திரம் மாசகந்தை மை மொட்டைத்தலை செவிடு அழுகைசடை மனிதரிடத்தில் விருப்பமில்லாமை கூன் அழுக்குமேனிவிரித்த சிகைத்தலை சதா நித்திரை குஷ்டம் கொலை எண்ணெய்த்தலை மனோவியாகூலம் உன்மத்தம் தாரித்ரியக்ஷயரோகம் இதுகளையுடையவர் முகத்தையும் நீட்டு அழுகை விதவை ஆகிய மாதர்முகத்தையும் பாம்பு பூனை சாம்பல் எருமை விளக்கு மாறு மயிறு உலக்கை முறம் என்னுமிவைகளையும் பார்த்தால் அன்றைக்கு கெடுதியுண்டாகும்.

### 6-வது விழித்தவுடன் கண்ணாடிபார்த்தலின் குணம்.

தூக்கம்விழித்தவுடன் கண்ணாடிபார்த்தலினால் வீரிய விர்த்தியும் மகிழ்ச்சியும் சர்வவசியமும் ஞானமும் உதிகரிக்கும்.

### 7-வது மிதாமித வார்த்தையின் குணம்.

மிதமானவார்த்தை வசனித்தால் உள்ளறிவும் சரீரசவுக்கியமுமுண்டாகும் அதிகமாகவசனித்தால் மேற்சொன்ன அறிவும் சவுக்கியமுங்கெடும். இதுவுமல்லாமல் ரசதாதுவும் ரத்ததாதுவுங்கெடும். அவ்விரண்டு தாதுகளுங்குறைவதனால் பித்தம் அதிகரிக்கும் அதனால் சிலேஷ்மரோகம் பிறக்கும் அதனால் சலரோகமுண்டாகும்.

### 8-வது பல்விலக்கலின் குணம்.

தூள் இலை கொம்பு இவைகளால் பல்விளக்கினால் பற்களுக்குக்குற்றமில்லை வாதபித்த சிலேஷ்மங்களால் பல்லினிடத்தும் அதன் வேரினிடத்து முண்டாகின்ற 23-ரோகங்களும் உண்டாகாது. மேற்சொல்லிய தூளும் இலையும் கொம்பும் இயல்பான துவர்ப்புள்ளதுகளா யிருக்கவேண்டும். அப்படி இருந்தால் இறுதிநாள் வரைக்கும் பல்கள் மலையைப்போல அசைவின்றி உறுதியாகவிருக்கும்.

### 9-வது பல் விளக்கத்தக்க கொம்புகள்.

கருவேல் குச்சியால் பற்களுக்கு உறுதியும் வேப்பங்குச்சியால் ஒளியும் நீர்ப்பூலாக்குச்சியால் வீரியவிருத்தியும் ஆலம்விழுதால் இலட்சுமிகடாக்ஷமும் நாயுருவிவேரால் முகவசீகரமுமுண்டாகும்.

### 10-வது பல் விளக்கத்தகாத வஸ்துக்கள்.

செங்கல்மாமணல் கரிதென்னம்பாளை வைக்கோல் இவைகளால் தினமும் பல்துலக்குபவரிடத்தில் இலட்சுமி நீங்கி மூதேவிசேர்வாள்.

### 11-வது பஞ்சகற்பவிதி.

கஸ்தூரிமஞ்சள் மிளகு வேப்பம்வித்து கடுக்காய்த்தோல் நெல்லிப்பருப்பு இவைகளைக் கிரமப்பிரகாரம் காராம்பசுவின் பால்விட்டு அரைத்து கொதிக்கவைத்து ஒப்பற்றசிரசில் தேய்த்துக்கொண்டால் எக்காலும் அதிசூலரோகத்திற்கும் அதிசுட்சரோகத்திற்கும் இடமில்லை இதுவே பஞ்சகற்பவிதி.

### 12-வது ஸ்நானகாலவிதி.

சித்திரை வைகாசிமாதங்களில் உதயமான 5-நாழிகைக்குள்ளும் ஆனிஆடிமாதங்களில் 8-நாழிகைக்குள்ளும் ஆவணி புரட்டாசி அற்பிசி கார்த்திகை மாதங்களில் 4-நாழிகைக்குள்ளும் மார்கழி தைமாதங்களில் 2-நாழிகைக்குள்ளும் மாசி பங்குனி மாதங்களில் 3-நாழிகைக்குள்ளும் பக்குவமாகவுள்ள தைலஸ்நானஞ்செய்தால் அரோகசரீரத்தைப் பொருந்துவார்கள்.

### 13-வது வெள்ளைவஸ்திரத்தின் குணம்.

வெண்துகிலுக்கு வாதாதிதோஷங்களும் வியவும் விலகும் ஆயுசுவிருத்தி இலட்சுமிவிலாசம்வனப்புமகிழ்ச்சி அறிவுபலம்ஆகியஇவைகளுண்டாம்

### 14-வது போஜனகாலவிதி.

இரண்டுகாலபோஜனமே நன்மைதப்பி மூன்றுகாலபோசனங்கொள்ளில் வேண்டுமாயின் சூரியன் இளம்பருவமாயிருக்கு முதயகாலத்தில் மூன்றே முக்கால் நாழிகைக்குள்ளும் காலைப்பருவமாகிய உச்சிகாலத்தில் பதினைந்து நாழிகைக்குள்ளும் மேற்றிசைக் கடலிற்சேர்ந்த பருவமாகிய இராத்திரி ஏழரை நாழிகைக்குள்ளும் பசியாகிய தீமையுடையவர்கள் கொள்வார்கள் சூரியனுதயமாகி பதினொன்றேகால் நாழிகைக்குள் உண்கிற நல்லவுண்டி தேகத்திற்குப்பொருந்தும் பதினைந்து நாழிகைக்குள் உண்கிற உணவுமிதம் என்கிற அளவில் பிணிகளைவிலக்கும் இருபத்திரண்டரை நாழிகையில் புசிக்கின் ரோகசம்பவமாம். 30-வது நாழிகையிலருந்தும் அசனம் உயிருக்கு முடிவைத்தரும் இந்தநான்கில்முதல் 2-ம் காலபோஜனமும்மற்றவை அகாலபோஜனமுமாம். போஜனமுதலில் மதுரவஸ்துவும் மத்தியில் புளிப்பு உப்பு உவர்ப்பு இலைக்கறிகளும் முடிவில் துவர்ப்புச் சம்பந்தமான புளிப்புத்தயிர் ஊறுகாய்களும் உண்ணல் வேண்டும்.





அப்படியுண்ணில் சுகத்தையடைவாய் எவ்விததேகிகட்கும் முக்கால்வயிற்றுணவேயன்றி முழுவுணவில்லை. அதற்கென்னகாரணமென்றால் அன்னம்பதார்த்தங்கள்கூடி அரைவயிற்றுணவு பால் மோர் சலம்கூடி அரைவயிற்றுணவு பால் மோர் சலம்கூடி கால்வயிற்றுணவு இவைபோகஇன்னுங் கால்வயிற்றுணவுகொள்ளத்தக்க இடத்தை வெளியாக வைக்கவேண்டியது அப்படிக்கு வைக்காவிட்டால் அன்னம்சீரணமாகாது அதைச்சீரணிக்கத்தக்க அக்கினியும் வாயுவுஞ் சஞ்சரிப்பதற்கிடமில்லை. துவாரத்தையுடைய நீளிபையிற்றங்கிய உணவானது 4-பிரிவையுறும். அவையாவன ஒருபங்குகிருமிகளுக்கும் ஒருபங்குமலத்திற்கும் ஒருபங்கு ஜடராக்கினிக்கும் ஒருபங்கு தேகத்திற்குமாம் ஒருநாளுண்ட உணவினின்றும் பிரிவுற்ற அன்னரசமானது அன்றைக்கு ரசதாதுவைவளர்த்து வறித்தக்கும் 2-ம் நாளுண்ட அன்னரசமானது அந்த ரசதாதுவிலேற முன்பு வறி நின்றரசம் இரத்த தாதுவிற்பாயும். இவ்வாறே 3-நாள்மாமிசதாதுவிலும் 4-ம் நாள் மேதோதாதுவிலும் 5-ம் நாள் அஸ்திதாதுவிலும் 6-ம் நாள் மஜ்ஜைதாதுவிலும் 7-ம் நாள் சுக்கில தாதுவிலுமாகச்சென்று அத்தாதுக்களைவிருத்தியடையச்செய்து 8-ம் நாள் தேகத்திற்கு குன்றாத வன்மையைக் கொடுக்கும்.

### 15-வது உண்கலபேதம்.

மனோற்சாகபோஜனத்திற்கு வெள்வாழையிலையேனும் மற்றையஇலைகள் மத்திமமாம் தங்கம் வெள்ளி வெண்கலம் இவைகளாற்செய்த உண்கலங்கள் மிகவுநலமாம் இவைகளைவிட மட்கலமே சிறந்தது இதிற்புசிக்கில் க்ஷயமும் பாண்டுரோகத்தாற் பிறந்த நீர்சுரப்பும் விலகும்.

### 16-வது அன்னத்தின் பிரமாணம்.

அன்னமானது கொஞ்சஞ் சுடுகையாயுள்ளபோதே உண்பது உத்தமத்திலுத்தமமாம். அது வாதபித்த கபங்களினாலும் பீனசத்தினாலும் விளைகின்ற நோயையும் அரோசகத்தையும் நீக்கி சரீரத்திற்கு வன்மையைத்தரும் புழுங்கலரிசி அன்னத்தைப்புசிக்கின் வாதகோபமும் பலமும் வலியரோகங்களுமில்லை இது நோயாளருக்குதவும் பச்சரிசி அன்னமானது பலத்தையும் குழந்தைகட்கு மாந்தத்தையுமுண்டாக்கும் பித்தகோபத்தையும் மூத்திரக்கிரிச்சரத்தையும் நீக்கும்.

### 17-வது சமைக்கும் விதமும் அதன்பயனும்.

பழைய அரிசியை தவிடு நொய் முதலியவைபோம்படி நன்றாகத்தீட்டி முழு அரிசியாக ஆய்ந்தெடுத்து இளவெந்நீராற்கழுவி வஸ்திரத்திற்கொட்டிச் சற்றே ஆறவைத்து ஒருபாண்டத்தில் அரிசிக்கு மூன்றுபங்கு சலம்விட்டு அடுப்பேற்றி அது நுரைக்கட்டி கொதிக்கும்போது அரிசியை அதில்போட்டு முக்காற்பாகமாக வெந்தவுடன் கண்டியால்விழாவி வடித்துக்கொண்டு மறுபடியுந் தணலில்வைத்துப் பக்குவமா இருக்குஞ்சமயத்தில் இறக்கிக்கொள்வதற்கு சுத்த அன்னமென்றுபெயர் இதை நற்கறிகளோடுண்ணில் வாதபித்த சிலேஷ்மம் என்னுமுத்தேகிகளுக்கும் முக்கியமாகவுதவும் பத்தியங்களுக்கும் ஆகும் அன்றியும் குடலைப்பற்றிய நோய்கள் முழுமையும் விலகும் குற்றமில்லைபாலுஞ் சாதமுமாகவுண்ணில் பித்தகோபமும் தாகமும் விலகும் கொஞ்சம்மந்தஞ்செய்யும் ஆனால் தேகபுஷ்டியும்உடனே வீரியவிருத்தியும் உண்டாகும் இதுபாலகவுமார விருத்தர்பரியந்தமுதவும்.

### 18-வது பசும்பாலின் பத்தியம்.

பசுவின்பாலைச் சாப்பிடவேண்டுமானால் புளிப்பு துவர்ப்பு உவர்ப்பு கைப்பு கார்ப்பு இனிப்பு என்னும் 6-சுவையில் 1-வதும் 2-வதும் ஆகிய சுவையுள்ள வஸ்துவுக்குள் எவையும் அநுபானமாகச் சேர்த்துக்கொண்டு உண்ணலாகாது சுக்கிலத்தை விருத்திசெய்யும்படியான கடைசியிற்சொல்லிய கார்ப்பு இனிப்புஎன்னும் 2-சுவையுள்ள வஸ்துக்களை அநுபானமாகச் சேர்த்துக்கொண்டு உண்ணெனச் சிலர்சொல்லுவர் ஆனாலும் அந்த இரண்டுசுவையில் கார்ப்புள்ளபொருள் நோயுற்றபோழ்து அநுபானமாகக் கொள்ளலாகும் மற்றகாலத்தில் பாலைத்தனியே உண்ணவேண்டின் அதற்கு அநுபானம் கற்கண்டுப்பொடி பொருந்தும் 8-வகைக்குற்றங்கள் நீங்கிய அன்னத்துடன் உண்ணவேண்டின் மதுரமுள்ள பழம்அநுபானமாகப் பொருந்தும் ஆதலால் இவ்வாறுமுறைப்படி உண்ணக்கடவை அன்னத்திற்கு எப்போதுங்குற்றமே இல்லையாயினும் பாகபேதங்களுண்டானால் 8-வகை தோஷங்களுண்டாகின்றன அவையாவன முதலாவது அன்னத்தோஷம் என்பது கஞ்சிக்கிக்கொள்வதாம். இதனால் ஆமம் விஷமம்என்கிற அஜீரணங்கள் பிறப்பனவாம் 2-வது பிச்சில் தோஷமென்பது அன்னங்குழைந்துபோவதாம் இதனால் ஜடராக்கினி அணைந்துவிடும். 3-வது அச்சிதோஷம் என்பது மயிர் கிருமி உமி முதலியவைகளோடு சமைப்பதாம். இதனால் அரோசகமுண்டாகும் 4-வது கொதித்தோஷம் எ-து கருக்கரிசியன்னமாம் இதனால் அலசரோக முண்டாகும். 5-வது சுஸ்கில தோஷம் எ-து ஆறி உலர்ந்த அன்னமாம். இதனால் விஷமரோக முண்டாகும். 6-வது தக்ததோஷம் எ-து காந்திய அன்னமாம். இதனால் ஜீரணதாதுரோக முண்டாகும். 7-வது விருபதோஷம் எ-து கொழியலரிசி யன்னமாம். இதனால் ஆயுள். முதலானவைகள் கெடும். 8-வது அனர்த்துஜதோஷம் எ-து கொத்து ஜலம்பிறந்து நுவிழைந்த அன்னமாம் இதனால் அதிநித்திரையும் சீதாதிரோகங்களும் உண்டாகும்.

### 19-வது பால் அருந்தற்கு நாழிகை.

பசுவின்பாலை கறந்த மூன்றேமுக்கால் நாழிகைக்குள் அல்லது 5-நாழிகைக்குள் உண்ணல்வேண்டும். இவ்வாறுண்டால் அந்தப்பால் தேவாமிர்தத்தை யொப்பாகும். அந்தக்காலத்துக்கு மேற்பட்ட பாலையுண்டால் பிரமன் அறிதற்கரிய சிவனுண்ட விஷத்தை யொப்பாகும்.

### 20-வது பதார்த்தவகை.

குறிஞ்சிநிலமாகிய மலைச்சாரல் பூமியில் விளைகின்ற துவரம்பருப்பை வெந்நீரில்போட்டுச் சமைத்து போசனஞ் செய்வதற்கு முதலில் பசுவினெய்யுடன் அன்னத்திற்கலந்து புசித்தால் ஒருபிடிசதை வளரும் அன்றியும் குறிஞ்சி நிலத்தில் பயிராகிற வஸ்துக்களெல்லாம் அதிக பலமுள்ளதாயிருப்பதால் அந்த நிலத்து துவரையே விசேடமாகும்.

---





### துவரம்பருப்பின் குணம்.

கட்டளைக்கலிப்பா.

கவரைவாழைக் கனிபலவின்கனி
 கல்லமாங்கனி பாலொடுநெய்க்கறி
கவளப்போ தேமந்தமாம்பரி
 காரக்கேட்கும் பயித்தியக்காரரே
எவருங்காண்க அறைகுதுமன்னத்தி
 விட்டுணுக்கறி தன்னுடன்கூடவே
துவரைநீர்மிள குள்ளிட்டுக்கொளீர்
 துட்டாவாதமுந் துஞ்சிடுமுண்மையே.

(இ-ள்.) வாழை-பலா-மா-என்கிற முப்பழங்களையும் பால் நெய்க்கறிகளையும், மிதமின்றிப் புசிக்கின் உடனே அக்கினிமந்தம் பிறக்கும் அதை நீக்குவதற்கு வகையறியாது சிகிச்சை வினவுகின்ற பித்தர்களே; கேண்மிரே! துவரம்பருப்புக் கட்டிருந்த ஜலத்தில் மிளகு வெள்ளைப்பூண்டு முதலிய சம்பாரங்கள் சேர்த்து ரசம்வைத்து அதை கறிகள் சேர்ந்த உணவுடன் சேர்ந்துண்ணில் மேற்கூறிய அக்கினிமந்தமும் வாதப்பிரகோபமும் நீங்கும்-என்பதாம்.

### 21-வது ஜலம் அருந்தும் வகை.

போஜனாந்தத்தில் திருப்தியாகும்படி வெந்நீரை ஒருதரமாக உண்டால் ருட்சை வாதாதிக்கம் விதாகம் அலசம் வயிற்றுப்பிசம் ஆகிய இவைகள்போம் ஆயுளும் சுக்கிலமும் விருத்தியாகும் நீரை அன்னாந்துண்ணில் பாதிரியவாதமும் குனிந்தழிக்கில் இருமலும் உண்டாகும். பாத்திரத்தை வாயாற்கடித்து அருந்தில் ஒருரோகமும் இல்லை இரவில் நீர்பூட்டிய அன்னத்தை அக்கிராகாரத்துடன் சூரியோதயகாலத்தில் அருந்தில் சுக்கில விருத்தியும் உதராக்கினியும் சரீரமுழுதுந் தேஜசமுண்டாம். பயித்திய வாத தொந்தமும் விலகும்.

### 22-வது கஞ்சி வகை.

துன்பமேயன்றி இன்பந்தாரத கட்ட கபரோகிகளுக்கும் சரீரமுழுதும் எலும்புதவிர மாமிசப்பசை யிழந்தவர்களுக்கும் பலமற்றுக் கையால் ஓய்ந்து வீழ்கின்றவர்களுக்கும் பலவைக்கோதுமையென்னும் பார்லி அரிசிக்கஞ்சியையே மருந்தாகக் கொடுத்தல்வேண்டும். கோதுமைக்கஞ்சியானது வாதசுரம் ஜலதோஷம் கபம் சந்நிபாதம் இவைகளை விலக்கும் தேகத்திற்கு வன்மையைத்தரும்.

### 23-வது சேர்க்கை அவலின்குணம்.

அவலில் பாலும்நெய்யும் சேர்த்து உண்டால் சரீரத்திற்கு பலமுண்டாகும் தயிர்களிற் கலந்துண்டால் மந்தமுண்டாகும் மோரில் கலந்துண்டால் சோபமும் எரிவு நீங்கும் சலத்தில் ஊறவைத்துண்டால் உளியால் வெட்டினால் அதுவும் வாய மடக்கத்தக்க உறுதியான வாய்வு உண்டாகும் ஆகாரமும் ஏற்றுக்கொள்ளாது எவைவகைப்புளியையாவது சேர்த்து உண்டால் பித்தரோகம் நீக்கும் இராப்போசனஞ் செய்தவுடன் சிறுநடையாக 100-அடி உலாவியபின் நித்திரை கொள்பவர்களுக்கு முன்பு உண்ட அன்னத்திற்சேர்ந்த விஷபதார்த்தங்களெல்லாம் ஒன்றறக்கலந்து சீரணிப்பதுந்தவிர அவ்வுண்டியில் திரிதோஷமுஞ் சாராதென்றுணர்க.

## 24 - வது தாம்பூல வகை.

தாம்பூலந்தரிக்குமிடத்து முதலில்வெற்றிலையையன்றிப் பாக்கைமாத்திரம் போட்டுக்கொண்டால் குற்றமுண்டாகும். பந்துக்களின் உறவு நீங்கும் முன்பதாக வெற்றிலையைத்தின்று பின்புமுறைப்படிக்குப்பாக்குவெற்றிலைகளைத் தின்னவேண்டும். இவ்வண்ணம் நடத்துகின்ற விவேகிகளிடத்தில் இலட்சுமி நிலைபெற்று வாசஞ்செய்வாள். அன்றியும் துவர்த்தல் சொக்குதல் மூர்ச்சைப்புழு உளுத்தநாள் பிசுபிசுப்பு முதலிய குணங்கள் இயற்கையாகப் பாக்குகளிலிருப்பதால் இதை முதலிற்றின்றால் உடற்கு அபாயம் நேரிடும் என்பதைக்கருதி குற்றமுறும் என்று பந்துக்களின் கூட்டுறவு நீங்குமென்றும் சுண்ணந்தடவாத புனிதமுள்ள ஒரு வெற்றிலையை முதலில்மென்று அந்தச்சாற்றை விழுங்கில் நெஞ்சலரலும் கபக்கட்டும் மேற்கூறிய பாக்கின் தோஷங்களும் விலகுவதால் இலட்சுமிவாசஞ் செய்வாளென்றுங் கூறப்பட்டது. பாக்கு வெற்றிலை சுண்ணம் இவைகளை ஒன்றற மெல்லும்போழ்து அதில் நின்று ஊறிய முதல்நீர் நஞ்சு, 2-வது நீர் மிகுபயித்தியம், 3-வது நீர் அமிர்தம், 4-வது நீர் அதியினிப்பு, 5-வது 6-வது நீர்கள் பித்ததோஷம், அக்கினிமந்தம், பாண்டுரோகம் இவைகளையுண்டாக்கும்.

## 25 - வது அதி ஓட்டம் சதா உட்கார்ந்திருத்தல்.

### நொந்தசோறுண்ணல் மிகுகாற்று விரும்புதல்.

### இவைகளின் குணம்.

இறைக்கும்படி ஓடுதல் சதா உட்கார்ந்திருத்தல் சுடுபுகைபடும்படி உலாவல் கொத்த சோறுண்ணல் மிகுகாற்று விரும்புதல் என்னு மிச்செய்கைகளினால் முறையே க்ஷயம் அதிதூலம் நேத்திரரோகம் அக்கினிமந்தம் முதலிய நோய்வருக்கமும் மகாவாதரோகங்களும்உண்டாகும் எப்போதும் அதிக நடை நடப்பதால் காந்தியும் சகசதேகபுஷ்டியும் பலமும் மத்திபமாம் சுக்கிலக்ஷீணமும் கிழரூபமுமுண்டாகும்.

## 26 - வது சயன வகை.

இலவம் பஞ்சுமெத்தையின் படுக்கையால் உட்சூடு நீங்கும். பருத்திமெத்தை இரத்தம்விந்து காமம்சுரம் இவைகளை விருத்திசெய்யும். நற்குணமுள்ள கோரைப்பாயிற் படுத்தால் அக்கினிமந்தமும் சுரவேகமும் நீங்கும். தேகக்குளிர்ச்சியும் சுகநித்திரையுமுண்டாகும். கழுத்திற்கும் தோளுக்கும் மத்தியிலிருக்கும் அளவான உயரமுள்ளதாகவும் நீளம்வேண்டியமட்டாகவும், இலவம்பஞ்சினால் தைத்த தலையணையின்மேல் சிரசுவைத்துப்படுத்துக்கொண்டால் பாதாதிகேசம்வரைக்கும் உள்ள எத்தப்பக்கத்து நாம்புகளும் பிசகாமல் சமமாகவிருக்கும் அதுவுமல்லாமல் சிரசைப்பற்றிய ஆவர்த்த நோய்களும் நீங்கிவிடும்.

8





## 27 - வது புணர்ச்சி வகை.

துயரம் அச்சம் தேகமுழுதும் ரோமம் திரிதோஷகோபம் தூங்கிவிழுதல் அலித்தன்மை நாணம் பசிகருப்பம் தாகம் தன்வயதுக்கு மேற்பட்ட வயது புணர்ச்சியில் வெறுப்பு சுபமின்மை குசிமுகயோனிரோகம் அலட்சியம் கோபம் அழகின்மை கற்றாழைநாற்றம் கோள்சொல்லுதல் அதிதூலரோகம் ஆகிய இவைகளையுடைய மாதர்கள்போகம் சகலரோகங்களுக்கும் காரணமாம். இதன்றி தேவஸ்திரீ குருபத்தினி இராஜபத்தினி வைஷஸ்திரீ தூரஸ்திரீ பழிமாது விதவை ஆகிய இவர்களைவிட்டு மற்றயாரைத் தொடரும்.

## 28 - வது அரோகசந்தானப் புணர்ச்சி.

பதினாறுவயதுள்ள ஸ்திரீயும் இருபதுவயதுள்ள புருஷனும் சரீரமுழுவதும் மறைப்பில்லாமையாகவும் இருவர்க்கும் ஆசையொன்றாகியும் போகம் ஒன்றாகியும்மாதந்துக்கோர்நாள் இராத்திரிகாலத்தில் சரீரசம்பந்தப்பட்டு கூடுங்காலத்து உண்டாகும் கருவானது தாய் தந்தைகளுக்குள்ள பலத்தை தன் சரீரத்திற்பொருந்தி தேகம் திடமுள்ளதாக விருக்கும். வியாதி வராது வந்தாலும் சூரியனைக்கண்டபனிபோல் நீங்கிவிடும். (தாய்க்குந் தந்தைக்குந் தேகம் உறுதியாயிருப்பது மன்றி வியாதியுமணுகாதென்பது கருத்து.) மேற்சொல்லிய ஸ்திரீக்குக் கருப்பப்பையும் சோனிதமுஞ் சுத்தமாயிருக்கவேண்டும் புருஷனுக்கோவென்றால் சுக்கிலமும் வாதமும் இருதயமும் சுத்தமாயிருக்கவேண்டும். இவ்வாறிருந்தால் நல்லகருத்தரிக்கும் முன்சொன்ன முறைப்படி கூடுவதும் ஸ்திரீக்கு மாதாந்த ருதுகாலமாகிய பனிரண்டு நாளுக்குள் கூடவேண்டும். ஏனெனில் அந்நாட்களில் சுக்கிலம்போய்த் தங்குகின்ற கருப்பப்பையின் துவாரமானது இராத்திரி. காலத்தில் தாமரைப்பூவைப்போல் மூடிக்கொள்ளாமலிருப்பதனாலென்று கொள்க. ருதுவான முதல் மூன்றுநாளும் அசுத்த நாளாகையால் புருஷன் சேரக்கூடாது. அதன் விபரம் கருப்பப்பையின் முகத்துவாரமாகிய யோனித்துவாரம் பிரமாணத்தைத்தப்பி அதிகமாகத் திறந்திருப்பதால் அவ்வழியாகச் சுக்கிலத்தின்பங்கு மிகுதியாகச் செல்லப்படுகின்றது அப்போது அவிடத்துச் சோனிதமும் இதுவும் ஏற்றக்குறைச்சலின்றி சமமாகத்திரண்டு ஆணும் பெண்ணும் அல்லாத அலிப்பிள்ளையாகப் பிறக்கும் இதைப்பற்றியே முதன் மூன்றுநாளும் அசுத்தநாளென்றதும் சேரக்கூடாதென்றதுமாம். மற்ற ஒன்பது நாளுக்குள் இரட்டித்த நாட்களிற் சேர்ந்தால் ஆண்குழந்தையும் ஒற்றைப்பட்ட நாட்களிற்சேர்ந்தால் பெண்குழந்தையும் உற்பவிக்கும். இந்த விபரத்தையெல்லாம் "சரீரமென்னுஞ் சாத்திரத்தின்" முதல் அத்தியாயத்தில் காண்க.

### 29 - வது தினப்புணர்ச்சியின் குணம்.

கொக்கோக சாஸ்திரத்திற்சொல்லும் பலவித லீலைகளுடன் இரவும் பகலும் நித்திரையில்லாமல் புணர்ச்சி செய்கின்றவர்களிடத்தில் மிகுதியா யுண்டாகும் வியாதிகளை அளவிடத்தொடங்கினால் அதற்கு முடிவில்லை அதற்கு பரிகாரஞ்செய்யு மருத்துவன் கைக்கும் ஓய்வில்லையென்றுணர வேண்டும்.

### 30 - வது இரவில் நித்திரைப்பங்கத்தின் குணம்.

இராத்திரியில் நித்திரை செய்யாதவர்களிடத்தில் நிலையாயிருப்பதற் குச் சித்தப்பயக்கமுதல் மந்தம்வரையிற் சொல்லியரோய்கள் வந்துபொருந் தும் அன்றியும் வேடருடைய காய்கள் களைதல்போலப் பலவியாதிகளுங் கௌவிக்கொள்ளும்.

### 31 - வது பகல் நித்திரையின் குணம்.

பகல் நித்திரையானது தண்டம் மேட்டாக்ஷியம் உருத்தம்பம் சரு வாங்கம் உக்கிராக்கிரகம் சுப்தி அனுத்தம்பம் திருக்குத்தம்பம் சோணிதம் ஆட்டியம் புருவாடோபகம் கிருத்திரசி வர்த்துவம் சம்பூகம் அவபேதம் அவதந்திரம் அவதானம்விவர்தாசியம் என்னும் பதினெட்டுவித வாதரோ கங்களை விளைவிப்பதற்கு ஒருவித்தாகும். ஆகையால் பகல்நித்திரை செய் யக்கூடாதென்பதாம். இந்த வாதரோகங்களின் விபரங்களையெல்லாம் "நயனாமிர்தம்" என்னுஞ் சாத்திரத்தில் எட்டாவது அத்தியாயத்திற் காண்க.

### தினக்கிரமாலங்காரச் சருக்கம்
### முற்றிற்று.

---



உ
சிவமயம்.

## பீர்முகமது
### திருவாய்மலர்ந்தருளிய
# திருமெஞ்ஞான சர நூல்.

### காப்பு.

ஆனந்தி னரும்பொருளா யுறைந்த காதி
யகண்டபரி பூரணமாய் நிறைந்த சோதிக்
காரணத்தின் காரணனைத் துதித்து நாளுங்
கதிமுகம்ம திறலைக் கருத்தன் வைத்து
வாரணத்தின் சதுயார்கள் பதங்கள் போற்றி
மற்றுமொலி யார்கள்பதம் வணங்கி வாழ்த்தித்
தாரணியோர்க் குணர்வுதிப்பத் திருமெய்ஞ் ஞானச்
சரநூலை முறை முறையாய்ச் சாற்றுவேனே.

### நூல்.

### எண்சீரடி ஆசிரிய விருத்தம்.

பொன்னுடை மெஞ்ஞானச் சரநூ லென்னும்
புகழ்பெரிய சாஸ்திரத்தின் புதுமை தன்னை
இக்கிலத்தி லறியாத மாந்தர்க் கெல்லா
மெடுத்துரைக்கும் பரிசுதனை யியம்பக் கேண்மோ
முன்னுள சாஸ்திரமாங் குசக்க லத்தின்
முன்னிலையிற் றடியென்ற பெருமை தோன்றக்
கன்னல்ரசச் செந்தமிழின் கவிதை யாகக்
கருத்துறையான் கழலனுற்றே னுலகத் தோரே. (1)

உலகவர்க்குச் சரநூலை யொளிப்பில்லாமலோதும்வகை யேதெனவே யுவந்துகேளாய், நிலைகருநிலையாது தெரியாய்க்கூறு-நீடூழிவாழ்வாக நிலை ப்பதோடு, விலகுவதும் வருங்காலஞ் செல்காலங்கள்-வியனுறவே நிகழ் காலம் மரணகாலம், கலைபெரிய வித்துவின்காரணத்தின்-காட்சிதனைக் கரு திப்பார் கூறுதானே. (2)

கருநிலையிற்றறித்ததனற் பொறியின்காட்சி-கதித்துலவும்வாயுவொடு கலந்தோன்றுகி,உருவெடுத்துஉயிரென்றவுடலைச்சூழவோடிவருஞ்சரமாக

வுடலுக் குள்ளே, திருகிலையி லேவரையும் பிரியகாடித்-திசைவாயுத் திரி கோணமறுகோணத்திற், சுருக்குவலை தாமரைநூற் சொருகும் வாரூய்ச்- சுழன்றுவரும் ராட்டினத்தின் சுழலைப்போலே. (3)

சுழன்றுவருமிருகலையுமொன்றோன்டாய்ச்-சொல்லுகிற விடகலைசந் திரனேயாகும், உழன்றுவரும் வலகலை சூரியனேயாகு-மொருமித்தவிருகலை தான் சுழுனேயாம், எழும்பிவருஞ் சரமொன்றின்விதமேயஞ்சு-வியல்பாக வியம்புகிறே னறிந்துபாராய், வளம்பெரிய வாய்வுதான்மேலேபோக்கி, வந் தோடு நாழிகையொன் றேய்க்கிடாதே. (4)

நாழிகைதா னொன்றரையாய்ப் பூமியோடு-நலமான நீழ்த்திசையேகளி னமாக, நாழிகைதா னொன்றேதான் மூக்கந்தண்டி-னடுவாக வோடுமேதா வப் புத்தானே, நாழிகைமுக் காற்பக்க விளிம்புபற்றி-நன்றாகவோடுமேதா தேயு வாகும், நாழியரையாகாச நடுவதாக நாடாம லோடுமடா நாளிற்பாரே. (5)

நாழியொன்றுக் கரையாகக் கலையொன்றுக்கு-நடக்குமினி யறுகலையி னற்றுப்போகும், ஜோமவிருகலையுஞ் சேர்ந்தேயோடு, நிலையாதுசுழிமுனே யே நெருப்புமாச்சு, நாழிகையொன்றிற்குச் சரத்திறேட்ட நடக்குமடா முந்நூற்று வறுபதாக, நாளொன்றுக் கிருபத்தோராயிரத்து-நாலொருபத் தைந்துசர நடக்கும் பாரே. (6)

பாரப்பா வெள்ளிதிங்கள் புதனேமூன்றும்-பக்குவமாய விடிநாலஞ் சந்திரனோடும், சேரப்பாசெவ்வாயுஞ் சனிஞாயிறுஞ்-செங்கதிரோ னோடு மடா விடிபுங்காலம், வாரப்பா வினியொருநாள் வியாழன் மட்டும் வளர் பிறைக்குச் சகதிரனே வளர்ந்துவோடும், கூரப்பா தேய்பிறைக்குச் சூரியன் றன்-குதிகொண்டு வோடுமடா கோணந்தானே. (7)

தானுனவாரமது வேழுஞ்சொன்னேன்-றப்பிவருஞ்சரத்துடைய பய னேக்கேளாய், வேறுஞாயிறிலே சரமேதப்பில்-வியாதியது மெய்தனிலே விளரும்பாராய், ஆறுதிங்களிலே சரமேதப்பி-லறுதியினு லவர்காலம் முடிவுமாகும், காலுலவுஞ் செவ்வாயிற் சரமேதப்பிற்-கலக்கமூறும் பெரிய வொருகலகமாச்சே. (8)

ஆச்சப்பா புதனிலே சரமேதப்பி-லபாயமடா தொடுத்தவகை பலி யாதப்பா, கீச்சப்பா குருவாரஞ் சரமேதப்பி-னிலைபாது பொருட்சேத நினைத்ததெல்லாம், சூட்சுமமாய்ச்சுக்கிரனிற்சரமேதப்பிற் சொல்லுகிறேன் மக்களுக்குச் சேதமாகும், தாழ்ச்சியடா சனிவாரஞ் சரமேதப்பிற்-றனக்கு வொரு தத்துவந்து தப்புவாயே. (9)

தப்பாக விருகலையுந் தவறியோடிற்-றனக்குவருஞ் சனிதோஷத்தை யில்லாமல், ஒப்பாக வொருபுறத்தி லொருநாளோடி-லொருமூன்று வரு டத்திலிறந்துபோவான், அப்படியேபொருபுறத்தி லுனாறோடி-லாறுமாத மடா வறுதிக்காலம், செப்புகிறேன் சந்திரனி லிரவேயொன்றுஞ்-செங் கதிரோன் பகலொன்று மியங்கிற்றுனல். (10)



ஆறுறுமருளான யோகியாறு லவன்பெருமையெவராலு மறியொன் றுது, போனசரமீளாமற் சுழலுமாகிற்-போருமடா வொருமூன்று மாசத் துள்ளே, நாளுமவிருசரமு மொன்றாயோடி-னூற்பதா நாளிலல்லோ கம னேக்காண்பான், போனசரம்மீளாமன் மேலேவாங்கிற் பொய்யல்லவறுதி யென்று வறிந்துபாரே. (11)

அறிந்துகொள்ளச் சொல்லுகிறே னின்னுக்கேளா-யப்பப்பா சந்தி ரன்று னியங்கும்போது, சிறந்தமனை குடிபுகுந்த நீளம்புதைத்தச்-சேராம லிருந்தவரைச் சேர்த்துவைக்க, விரைந்தேறும் விஷமிறக்க விதைவிதைக்க வேந்தர்களைத் தெரிசிக்க வேள்விசெய்ய, பிறந்தபின்ளை பேர்குறிக்கப் பிணியுந் தீர்க்கப்-பிரியமுடன் யாபாரம் பலவுங்கொள்ள. (12)

கொள்ளமனைக் கோதையரை காட்குறிக்கக்-கொடிதான பகையரிடங் கொழுகிச்செல்ல, வெள்ளமடா கிழ்க்கினறு வெட்டிக்கான-வேந்தர்முத லமைச்சருக்குத் தூதனுப்ப, அள்ளியிரு கையாலு மையமீய-வாருமடா வித் தனையுஞ் சந்திரன்மீது, தெள்ளியதோர் சூரியன்றனியங்கும்போது-தீர்க்க மாய்ச் செய்வகையைச் செப்பக்கேளே. (13)

செப்பக்கே ளாமனைகளம்பலங்கள்-சிறப்புடைய மாளிகைகள் சித்ர கூடம், ஒப்பரியசித்ரபடா மொளிர்விதான-முடைமைவகை மருந்துவகை யாவுஞ்செய்யத் துப்பலடா கடன்மேலே பயணம்பண்ணக்-கடிதான பேய் பூத மலகையோட்டச், செப்பணியு முலைபாலைச் சேர்ந்துவாழச்-செயமா கப் படைபொருத வழக்குரைக்க. (14)

உரையானமந்த்ரமுத லேதுஞ்செய்ய-வொழுங்காகக் கலையோதச் சா க்களுன்ன திருவானதேவர்முதற்பெரியோர்மற்றத்-தேவரையுந் திருமுன் னே வரவழைக்க குருபாதம் பணிந்துபுப தேசங் கேட்கக்-கொள்ளையிடப் பதியேறக் குளிக்கநீரில், தருசாத பூமியுள்ள தனமெடுக்கத்-தம்பனமே செ ய்யவல மாகும்பாரே. (15)

பாடியவோ ரிருசரமு மியங்கும்போது-பலியாது சுழிமுனேயே பழியு மாச்சு, ஆடியவோர்சரமோடும் புறத்தைத்தானே-யதிகமதாய்ப் பூரணமென் றுரைக்கலாச்சு, சாடியேவோர் சரமோடப் புறத்தைத்தானே-சாற்றுகி றேன் சூரியமென் றறிதற்காகத், தேடிமிக வந்தொருவ னுன்னைக் கேட் டாற்-றீர்க்கமாய்ச் சொல்குறியைச் சொல்லக்கேளே. (16)

சொல்லக்கேள் தெற்பணியாள்கெற்பந்தன்னிற், குமாறேபெண்ணே வென் றுன்னைக்கேட்டால், வல்லகலை சூரியனில் வலமேகேட்கில்-வளர்ந் திருக்கும் பாலகன்றனேயாகும், அல்லவவன் குனியத்திளின்றுகேட்கி லாளுகு மதன்கால மற்றுப்போகும், நல்லகலை சந்திரனிற் பூரணந்தா-னுரி யின்குல் பெண்ணென்று காட்டுவாயே. (17)

காட்டிவோய் சூனியத்தி னின்றேகேட்டு-சூரியின்குல் பெண்ணதவு கமனைச்சேரும், காட்டிலின்ன மாதினிர்கு மதலையுண்டோ-சுன்றுகச்சொல் லுமென்று மொருவன்கேட்டில், கூட்டியதோர் பூரணமே குழந்தையுண்டு கொடிதான சூனியமே ஞலமற்றுப்போம், நீட்டியநாள் சூரியனுந் திங்கள் மாது நீர்க்கமதாய் நீயெவர்க்குஞ் செப்பலாமே. (18)

செப்பியதோர் கருவதைதா னேதென்றாலுஞ்-செயமாமோ குறைவா மோவென்றுகேட்டில் தப்பாதுசூரியனிற் பூரணந்தான்-தப்பிவிட்ட காளா குஞ் சூனியத்திற் கருமமெல்லாம், ஒப்புடனே காணுத முதலைக்கேட்டி லுமின்வீருமே பூரணசந்திரனிற் றானே. (19)

சந்திரனிற் சூனியமும் பிரயாசந்தான்-சார்ந்துபோஞ் சூரியனிற் பூர ணந்தான், எந்திரமாஞ் சூரியனிற் சூனியந்தா-னெத்தேச காலமில்லை எழு ந்துபோச்சு, சந்திரனில் யாத்திரைசெய் வோர்க்குமேற்குத்-தம்பினதாற் றங்கடங்க டமக்கேயாச்சு, உந்தி வருஞ் சூரியனிற் கீழ்வடக்கு-உற்றவகை தப்பினதா லுனக்காகாதே. (20)

உனக்காகச் சூரியனிற் பயணம்போக-வொற்றைபடிமூன் றுதரம்வலது காலால், இனிதாகக் குதித்தல்லோ தத்திப்போத-வியல்பாகுமிருசாமு மொன்றுமாகில், தனக்குள்ளவிருகாலு மொன்றுய்க்கூட்டித்-தத்திப்போ மூன்றுதரம் மூச்சடக்கித், தனையல்லான் மற்றொருவ ரறியொண்ணுது-தங் காமானிரைத்துவரும் படையைக்கண்டால். (21)

படைபொருதச் சந்திரனிற் கச்சைகட்டிப்-பரிவுடனே சூரியனிற் பாய்ந்துசெல்லச், சடுதி வரும்படையானுற் சந்திரனுதிற்-சறுகுதலாய்ப்பின் பதித்துமுன்னேசெல்ல, அடவுடனே சுழிமுனைதா னியங்குமாகி லகலாம விருகாலுங் கூட்டியொன்றாய், இடைகாணு நிலைபிரியா திருந்துமூச்சை யெழும்பி நின்று மேனோக்கி யேற்றுவாயே. (22)

ஏற்றிவோய் சூரியனில் மாற்றான்தன்னை-யேறிவோய் பூரணத்தி லெ திரிபட்டான், ஒற்றையடாசூரியனு ரானேயாகு-முத்தமியாள் சந்திரனு மொருரான்டாகும், ஒற்றைநிலை கைக்கருவு மான்பாலப்பா-வோடிவருஞ் சந்திரனி லொருபெண்ணாகும், வித்தையடா வுடலுக்கு ளடைத்தவாவி-வெளிதழன்று வெறுங்கூடாம் விததனைக்கேளே. (23)

விதமாக வுடலுக்கு ளடைந்தமூச்சு-விர்த்தியொடு சூஸ்திரமா இருக் கும்போது, இதமாக வீராறங் குலமேயோடி-யிருநான்கு வங்குலமே யேறு முன்னே, துதியாகப்பேசுகையிற் பதினாரோடு-துடியாக விருநான்கு தொ டுத்துள்ளேறும், கதிகடையிலிருபதுபோய்ப் பத்துமீளும்-கடும்வேலைக்கறு நான்கின் முக்கான்கேறும். (24)

முன்னேறுஞ்சன் னடையிலேயாறுநேரடின்-மூவெட்டுவங்குலமேமுறை யிற்செல்லும், கண்மூடிச் சயனமிடி லாறெட்டோடிக்-கடுகிவரு மையாறு



கருதிப்பாராய், உன்னியுன்னி யோகசெயி லொன்பத்தாறு-வொன்றக் குப்பாதியடா வுயரவேறும், இன்றுலையான் சேர்க்கையிலே யெட்டெட் டோடி-யெண்மூன்று வங்குலமே யேறும்பாரே. (25)

பாரப்பா விவ்விதத்தா லாவியெல்லாம்-பறந்தோடிப் போறதினாற் ப்ராணன்போச்சு, சீரப்பாகால்வயிறே யருந்தவேண்டும்-நித்தியமு மறை வயிறேயமுதருந்தல், நேரப்பா முப்பாகந் தினமொன்றாக்கு-நித்திரையை நெடுநாளி னிறுத்திப்போடு, சிரட்டா வறுகோணத் தெழுத்தவாய்வைச்- சிந்தையிலே யுள்ளடக்க விதத்தைக்கேளே. (26)

விதமென்ன வொழியாம லோடுநாடி-வீசிவருமோ ரெழுத்தை விளம் பிக்கொண்டு, இதமானவாசானைவெழுத்தைக்கேட்டு வெள்ளளவும் பிசகா வற் சாத்தி ஞான்றி, ஓதுறதே வாய்திறந்தா லொழுதிப்போச்சு-வோகோ கோ சாமதனை யொன்றாய்மாட்டி, மாதிறத்தின் வாய்மூடி மனதிற்பூட்டி- மாசித்தான் மரணகலை சாகாதப்பா. (27)

சாகாது தவறாம லோடுநாடிச்-சாமொன்று தப்பிவிடிற்சற்றேபோச்சு வாகாகவோரெழுத்தா லிழுத்துமூச்சை-வாசித்து வெறிவீச வழக்கமாகும், ஓகோகோவொருமூச்சுக் கிருக்காலோது-உத்தமனேயொருமூன் றுநாளிற் றேறு, பாகமதா யொருபதுநா ளுயிர்தான்-பழக்கமதாய்க் கொல்லுவச மனையே நாளில். (28)

காலுக்கு காட்பழக்க மதிகமாக-நடந்தேறுசாதத்தை நன்றாய்க்கூட்டி வேழத்தைத் தப்பியிலேகட்டொண்ணுது-விதமென்ன கலையதையேவிரும் பிக்கொள்ளு, காலுக்கு காளாவி வளர்ந்தேயேறு நலமான சுத்திதனைச் செய்துகொள்ளு, ஊழூழி காலமெல்லா முண்டோசானு முலகவர்க்கு விக் நூலை யோதினேனே. (29)

ஓதுகின்ற சாமதனை யுலகத்தோர்க்கு வோளியாம லுரைத்தவிதமுவ ந்தபேர்கரு, வேதகுலவாவாஞ்சிபோலுன்வேந்தனேனும் சிறுமலுக்கீன்ற பரன், நீதமிலா திந்நூலைப் பொய்யென்றால் மனிலிறுத்தப் பீர்முகம்ம தென்போன்யானே, வேதமெனு மெய்ஞ்ஞான சாரமென்றே விளம்பி னேன் கவிமுப்ப தாகமுற்றே. (30)

ஞான சர நூல்

முற்றிற்று.



நீர்பார்க்கவேண்டி நெடுநாள் தேடிய இரகசிய புஸ்தகம் இதுவே!
உடனேபடித்து ஸ்திரி புருஷ மர்மங்களை தெரிந்துக் கொள்ளுங்கள்!

## சதிபதிகளின் மர்மம்

அல்லது

# மானிடரகசிய சாஸ்திரம்.

இதில் முக்கியமாய் ஆண் பெண் இருவருக்கும் அவசியமானதும், சஞ்சீவிக்கு நிகரானதும், நீடூழிகாலம் சந்தோஷத்தில் ஆழ்ந்திருப்பதற்கும், கலியாணம் ஆகப்போகிறவர்களுக்கும் பயன்படும் வண்ணம் செந்தமிழ் நடையில் விவரித்து எழுதப்பட்டது. இது வரையிலும் இவ்வளவு மர்ம ரகசியங்கள் விவரமாய் வெளிவரவில்லை என்று திடமாக சொல்வோம். இதில் முக்கியமாய் வசந்தனுக்கும், சுலோசனாவுக்கும், வினாவிடை தர்க்கங்கள் வெகு நேர்த்தியாயும், ஆண் பெண் அமைப்பும், அவர்கள் லட்சணமும் அவர்கள் சேரும் காலமும் பெண்களை சந்தோஷிக்கச் செய்யும் விதமும், சிசு உற்பத்தி நேர்மையும், சிசுவை கவனிக்கவேண்டிய ஏற்பாடும், உண்மையான ஜாதி பேதங்களும், அவைகளின் லட்சணங்களும், ஆண் பெண் இருவர்களும் இன்புற்றிருக்கும் விதங்களும், இன்ன ஸ்திரீயை இன்னவர் விவாகம் செய்யக்கூடும் என்ற சாஸ்திர அமைப்பும், போகம் செய்யவேண்டிய நாளும், நாழிகையும், இன்னவிதமாக போகிக்கவேண்டிய கிரமமும், ஆண் பெண் மலடு விவரங்களும், ருதுகாலங்களும், அவைகளின் பலா பலன்களும் அமைந்தது. மாதர்களுக்கு அமிர்தநிலை அல்லது காமம் எந்தகாலங்களில் எவ்விடத்தில் இருக்கும் என்பதையும், அதை எவ்விதமாய் நிலைபெயர்க்க வேண்டுமென்பதையும், ஆலிங்கனம் சும்பனம், நகக்குறி, பற்குறி, தாடனம், அங்குலியோகம் முதலியவைகள் செய்யும் கிரமமும், பிரகஸ்பதி பகவான் தேவேந்திரனுக்கு அருளிச் செய்த உலோகாயுதம் சம்மதமுமான சிறப்புப் பொருந்திய நூல். தேகத்தை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்வதற்கும், பிணி முதலியவைகளுக்கு உட்படாமல் நீடூழிகாலம் ஜீவித்திருப்பதற்கும், அகால சேர்க்கையால் வரும் கெடுதியும். இதைபோன்ற அரிய பெரிய மர்மங்கள் நமது நூலில் இனிய செந்தமிழ் நடையில் சித்திரப் படங்களுடன் வெகு தெளிவாயும் விமரிசையாயும் பிரசுரித்திருப்பதைப்போல் இதுவரை வெளிவந்ததும் இல்லை. இனிவரப்போகிறதும் இல்லை. மற்ற நூல்களைப் போல் இதையும் நினைத்து விடாமல் இன்றே ஆடர் செய்யுங்கள் ஒரு புஸ்தகத்தை வாங்கி வாசித்த ஒவ்வொருவரும் தங்கள் சிநேகிதர்களுக்கு காண்பித்து அநேக புஸ்தகங்களுக்கு நீங்களே ஆடர்வாங்கிக் கொடுப்பீர்களென்று நிச்சயமாகக் கூறுவோம். இதில் கண்களை கவரும் அழகிய அதிசிறந்தவிசித்திரமான படங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அதிகம் சொல்லுவதில் பிரயோசனமில்லை, வாங்கி வாசித்தால் தான் இதன் உண்மை விளங்கும். இதன் விலை ரூபாய் ஒன்றேதான். விலை ரூபா 1.

சிவராத்திரிபுராணம் வசனம் 0-4-0.

ஷண்முகானந்த பக்திரசகீர்த்தனை 0-5-0.

மூக்தமலா அல்லது பிரபஞ்ச விநோதங்கள் விலை 2.0.0

---

## ஷண்முகானந்த புத்தகசாலை,

32, நயினியப்ப நாய்க்கன் தெரு, பார்க்டவுன் மதராஸ்.

## ஏன் இன்னும் வாங்கி வாசிக்க வில்லை?

எதை?

எல்லோரும் எதிர்பார்த்திருந்த மஹா அருமை வாய்ந்த

இப்




சீக்கிரம்
வரவழைத்துப் பாருங்கள்
பார்த்து
அதன் கருத்தை
யுணருங்கள்

உணர்ந்து
மோசங்களுக்கு
விலகி நில்லுங்கள்
நின்று தரும
வழியில் செல்லுங்கள்

எனும்

# மதிமோசக்களஞ்சியம்

## எதற்காக?

1 இப்பிரபஞ்சத்தில் நடக்கும் சகலவிதமான மோசங்களுக்கு உட்படாமல் இருப்பதற்கும்.
2. நெறிதவறி நடப்பவர்களின் மாயவலையில் சிக்குப் படாமல் வாழ்வதற்கும்
3. சன்மார்க்க வழியில் நடந்து கொள்வதற்கும்
4. நமது செல்வத்தை விருத்தி செய்துக் கொள்வதற்கும்
5. நமது அறிவை திருத்தஞ் செய்துக் கொள்வதற்கும்
6. பூலோக அனுபவங்களை நன்றாய் தெரிந்துக் கொள்வதற்கும்
7. பெண்டுகள் பிறர்வஞ்சகச் சொல்லை கேளாதிருப்பதற்கும்
8. போலி மந்திரங்களை நம்பாதிருப்பதற்கும்
9. உண்மையை நன்றாய் கண்டு உணர்வதற்கும்.

மேற்படி புத்தகம் இனிய செந்தமிழ் விகட நடையில் அச்சிடப்பட்டிருக்கிறபடியால் ஒவ்வொரு குடும்பத்திலும் விருத்தர், குமாரர், பாலர், பெண்கள் முதலியோர் இடத்தில் அவசியம் இருக்கவேண்டிய ஓர் ஒப்பற்ற நூலாகும் இந்நூல் கையில் இருப்பின் மோசமென்னும் இருள் சூழ்ந்த கடலில் மூழ்காமல் களஞ்சியம் என்னும் இக்கப்பலைக்கொண்டு தரும நெறி யென்னும் கரையை யடைந்து இன்ப மென்னும் மன நிம்மதியுடன் வாழலாம்.

விபரீத மோசங்கள் 141-அடங்கியதும் சில இடங்களில் அழகிய படங்களும் வெண்பாக்களும் விருத்தங்களும்; சேர்க்கப்பட்டிருக்கின்றன. படிப்போர் மனதை இரம்மிக்கச் செய்யும் இதைப்பற்றி அதிகம் எழுதுவது வீண்டம்பமாகும் இப்புத்தகத்தை பார்த்தவர்களுக்கே உண்மை விளங்கும். விலை ரூபா 1-0-0

### அவுட்டுச் சிரிப்பு.

கனவான்களே அவுட்டு விளம்புவது போலத் தொங்கி குலுங்கச்சிரித்து ஆனந்தமாக பொழுது போக்க வேண்டுமானால் "சிரிப்பலைகள்" கதையை வரவழைத்து வாசியுங்கள். விலை அணா 6.

---

## ஷண்முகானந்த புத்தகசாலை,

32, நயினியப்ப நாய்க்கன் தெரு, பார்க்டவுன் மதராஸ்.